



# பிரபுவின் மனக்குமுறல்!

என்னை உங்களுக்குத் தெரிந்திருக்க நியாய மில்லை. இவ்வளவு புத்தகங்களை எப்படிப் படிப்பது என்று நான் கவலைப்படுகிறேன் என்றுதானே நினைக்கிறீர்கள்? அதுதான் இல்லை. என்னைப் படிக்கவே வேண்டாம் என்று சொல்லிவிட்டார்கள். அதுதான் என் கவலை.

ஒன்றரை மாதங்களுக்கு முன்பு சென்னை பிராட்வேயில் இருக்கும் டொன்போஸ்கோ பிரிப்பரேட்டரி ஸ்கூலில் என்னைச் சேர்த்தார்கள்.

எனக்கு நடந்த இண்டர்வ்யூவில் வெற்றி பெற்ற பிறகுதான் சேர்த்தார்கள். எனக்கு அட்மிஷன் ஃபீஸ் 100 ரூபாய். ஜூன் முதல் செப்டம்பருக்கான முதல் பகுதிக் கட்டணம் ரூபாய் 140. ஸ்பெஷல் பீஸ் ரூபாய் 25.

அட்மிஷன் பாரம் ரூ. 5. என் புத்தகங்களுக்கான மொத்தச் செலவு 150 ரூபாய். எனது காக்கி யூனிஃபாரம், டை, மெடல் போன்றவற்றுக்குச் செலவு ரூ. 200. ஆக மொத்தம் 620 ரூபாய் செலவு செய்து பள்ளிக்கூடத்தில் சேர்ந்த என்னைத் திடீரென்று நிறுத்திவிட்டார்கள்.

காரணம் கேட்டால் எனக்கு வயதாக வில்லையாம். எனக்கு மூன்றரை வயதாகிறது. சேர்க்கும்பொழுதே சர்ட்டிபிகேட் எல்லாம் பார்த்துத்தான் சேர்த்தார்கள்.

இப்பொழுது வயதாகவில்லையாம். அதற்குள் எப்படி வயதாகாமல் போய்விட்டது? என்னை வெளியே அனுப்பியதற்குக் காரணம் இதுதானா? எங்கப்பாவுக்கு எழுத வரும், பேச வரும். சும்மா இருக்க மாட்டார் மனிதர். ஒரு வாரப் பத்திரிகையில் நர்சரிப் பள்ளிக்கூடங்கள் நடத்தும் கல்வி வியாபாரத்தைப் பற்றி எழுதி இருந்தாராம். அதற்காக நான் பழிவாங்கப்பட்டிருக்கிறேனா?

எல்லோரும் டொனேஷன் கொடுத்தால் இவரும் கொடுத்துவிட வேண்டியதுதானே! அதுதானே இப்பொழுதெல்லாம் 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்!' விபரம் இல்லாத மனிதர்!

என்னை வெளியிலே அனுப்பிய பெரியவர்கள் இந்தக் காரணத்தை யெல்லாம் சொல்லவில்லை. எதை எழுதச் சொன்னாலும் நான் கோடு போடுகிறேனாம். கோடு இல்லாமல் எழுத்து எங்கிருந்து வரும்?

கிழித்த கோட்டைத் தாண்டக் கூடாது என்றல்லவா இத்தனை கோடுகள் போட்டேன். இருந்தும் கே(ா)ட்டுக்கு வெளியே தூக்கி எறிந்து விட்டார்களே! என்னைவிட டொனேஷன் அதிகமாகக் கொடுத்து ஒரு பையன் என் இடத்தில் சேர்ந்துவிட்டானே!

கிறிஸ்துவ மடாலயங்கள் சொத்துக்கள் வைத்திருப்பதே பாவம் என்று வேறு போன வாரம் என் தந்தை ஒரு பேட்டியில் சொல்லி இருக்கிறாராம். இதெல்லாம் இவருக்கு எதற்கு?

இதற்காகத்தான் நான் பாதிக்கப்பட்டிருக்கிறேனா? என் தந்தை நாடாளு மன்றத்துக்குப் போனபோது வயதாகவில்லை என்றார்கள். எனக்கோ நர்ஸரிபள்ளிக்கூடத்திலேயே வயதாகவில்லை என்கிறார்கள்.

என் பெயர் பிரபு. என் அப்பா பெயர் வலம்புரி ஜான். அவர் பிறந்தது அக்டோபர் 14. நான் பிறந்தது அக்டோபர் 13. ஒரு நாள் முன்னே பிறந்திருந்தும் எனக்கு வயதாகவில்லை என்கிறார்கள். இது நியாயமா?

—எப்போதும் வென்றான் (பிரபு)

பிரபுவின் மனக்குமுறலைக் கட்டுரை வடிவாக்கியவர் **ஆர். ஸி. சம்பத்**

# தலையங்கம் தொடர்பாக...

நீங்கள் மே 16ந் தேதி இதழ் தலையங்கம் தொடர்பாக:

இந்திய உணவு கார்ப்பரேஷன் விவசாயிக்கு லாபகரமான விலை தருகிறது. இது உற்பத்தியை அதிகரிக்க அவனுக்கு உதவுகிறது. பண்டம் வாங்குவோருக்கு ஆண்டு முழுவதும் தட்டுப்பாடின்றி நியாய விலையில் உணவு தானியம் கிடைக்கச் செய்கிறது. இதனால் நஷ்டம் ஏற்படுவதையும் இந்நிறுவனம் பொருட்படுத்துவதில்லை.

பஞ்சம் ஏற்படும் காலத்தில் உதவ உணவு தானியத்தை இந்நிறுவனம் சேர்த்து வைக்கிறது.

விவசாயிக்கு நியாய விலை கிடைக்கவில்லை என்று கூறுவது தவறு. விலையை மாநில அரசுகளுடன் கலந்தாலோசித்து மத்திய அரசு நிர்ணயிக்கிறது. 'விவசாய விலைகள் கமிஷன்'' செய்துள்ள சிபாரிசுப்படி இந்த விலைகள் நிர்ணயிக்கப்படுகின்றன. உணவு கார்ப்பொரேஷன் இல்லை யெனில் இந்த விலைகூட மார்க்கெட்டில் கிடைக்காமல் விவசாயி தவிப்பான்.

லெவி முறை கிடங்கில் கையிருப்பை அதிகரிக்கவே கையாளப்படுகிறது.

இடைத் தரகர்களை உணவு கார்ப்பரேஷன் பயன்படுத்துவதில்லை.

உணவு தானிய விலைகள் ஸ்திரப்படவில்லை என்று கூறுவது தவறு. மற்ற பல பொருள்களின் விலையுடன் ஒப்பிடும்போது உணவு தானியங்களின் விலை ஏறக் குறைய ஸ்திரப்பட்டுள்ளது.

உணவு தானியங்கள் விஞ்ஞான பூர்வமாக உருவாக்கப்பட்ட கிடங்குகளில் சேமிக்கப்பட்டு விஷய ஞானம் உள்ளவர்களால் பராமரிக்கப்படுகிறது.

கிடங்கில் இருக்கும்போதோ போக்குவரத்தின்போதோ நஷ்டமாகும் தானியத்தின் அளவு அப்படி யொன்றும் அதிகமல்ல. இந்த நஷ்டத்தை மேலும் குறைக்க நாங்கள் ஆவன செய்து வருகிறோம்.

சென்னை-6 டி.எஸ். நாகராஜன்
11—8—82 பொதுஜனத் தொடர்பு அதிகாரி
இந்திய உணவு கார்ப்பரேஷன்

[தலையங்கம் வெளியாகி மூன்று மாதங்களுக்குப் பிறகு மறுப்புத் தெரிவித்துள்ள பொதுஜனத் தொடர்பு அதிகாரிக்கு நன்றி.

மேற்படி தலையங்கம் முக்கியமாக இரு செய்திகளின் அடிப்படையில் எழுதப்பட்டது. இரண்டும் இந்தியன் எக்ஸ்பிரஸில் வெளியானவை.

(1) மாவு மில்களுக்குச் சிக்குப் பிடித்த தானியங்களைத் 'தள்ளி'விட்டது கார்ப்பரேஷன் அல்லது தலையில் கட்டியது.

(2) உணவு தானியங்களைப் பாதுகாப்பதிலும் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்துக்குக் கொண்டு செல்வதிலும் ஏற்பட்ட நஷ்டம் மூன்று ஆண்டுகளில் இரட்டிப்பாகியது. புழு பூச்சியினால் மட்டுமின்றித் திருட்டுப் போவதாலும் மோசடிகளாலும் நஷ்டம் உண்டாயிற்று. இதனால் இந்திய உணவு கார்ப்பரேஷன் தலைவர் பா. ரா. அவர்கள் மிகவும் கவலைப்பட்டு அதிகாரிகளுக்குச் சுற்றறிக்கை அனுப்பினார்.

மற்றபடி உணவு தானியங்களின் விலை அப்படி ஒன்றும் உயர்ந்துவிடவில்லையென்று பொதுஜனத்தொடர்பு அதிகாரி கூறுவது பற்றிவாசகர்களே முடிவு செய்து கொள்ளலாம்.

கோதுமைக்கும் நெல்லுக்கும் கொள் முதல் விலையில் உள்ள ஏற்றத்தாழ்வு அநீதியானது. கோதுமை விளைவிப்பதைவிட நெல் விளைவிப்பது கஷ்டம். இருந்தும் கோதுமைக்கே அதிகவிலை நிர்ணயிக்கப்படுகிறது. விவசாயிக்கு ஆகும் செலவையும் அவனுக்கு நியாயமாகக்கிடைக்கவேண்டிய லாபத்தையும் கணக்கிட்டால் விவசாயப் பொருள்கள் விலை கமிஷன் நிர்ணயிக்கும் விலைகள் மிகக்குறைவே. —ஆசிரியர்]

## சிந்தனைக்குச் சில!

பணிவிடை செய்பவனே நல்ல தலைவன் ஆகிறான். அதிகாரம் செலுத்துபவன் வீண் ஆணவத்தைப் பெருக்குகிறான். பிறரை அடக்கியாள விரும்புகிற ஒருவனுக்குத் தலைமை ஸ்தானம் கிட்டாது. அல்லது அது கிட்டினாலும் அதைக்காப்பாற்றிக்கொள்ள அவனுக்கு இயலாது.

—சுவாமி விவேகானந்தர்

கடவுளிடம் உங்கள் உடைந்த இதயத்தைக் கொடுங்கள், அவர் அதை முழுமையாக்குவார்! பெண்மணியிடம் உங்கள் முழு இதயத்தைக் கொடுத்தால் அவள் உடைத்து விடுவாள்!

—ச. பிரஸ்ட்விச்

தாயே! பூமியில் நல்ல சுபாவமுள்ள பிள்ளைகள் பலர் உனக்கு இருக்கிறார்கள். ஆனால் அவர்களிடையே நான் ஒருவனே மதிகெட்ட பிள்ளை. மங்கள சொரூபியே! உன்னைத் தாய் என்று போற்றாமல் விட்டுவிட்டது என் குறை. எனினும் நான் என் மனம் போனபடி என்னைவிட்டுவிடுதல் உனக்குத்தகுமோ? கெட்ட மகன் பிறக்கலாம். ஒருபோதும் கெட்ட தாய் இல்லையன்றோ?

—ஆதி சங்கரர்

# இளமைக்கு எண்பது!

கு. ராஜேந்திரன்



எடின்பரோ கோமகனைச் சிரிக்க வைக்கிறார்



பேரன் சீனிவாசனைக் கொஞ்சுகிறார்



நேருஜியின் அன்பர்

அண்மையில் பகவான் சத்திய சாயி பாபா சென்னைக்கு வந்திருந்தபோது, விசுவநாதன்–ராதா தம்பதி இல்லத்துக்குச் சற்று நேரம் விஜயம் செய்து புனிதப்படுத்தினார். ''விநாயகசதுர்த்தியன்று அப்பாவுக்கு எண்பது வயது பூர்த்தியாகிறது'' என்றார் ராதா.

''அப்படியா!'' என்று சதாசிவத்தை அருட் புன்னகையுடன் திரும்பிப் பார்த்தார் பாபா. ''அன்று தம்பதி சமேதராய் புட்டபர்த்திக்கு வந்துவிட வேண்டியது'' என்று ஆக்ஞாபித்தார்.

அந்த ஆணையைச் சிரமேற் கொண்டனர் சதாசிவம் – எம். எஸ். தம்பதி. எண்பத்தோராவது பிறந்த தினத்தன்று பாபா முன்



தொழிலதிபர் சகவர அம்மாரை வரவேற்கிறார்



✕ இப் பத்திரிகையின் மும்மூர்த்திகள் - கல்கி, ராஜாஜி, சதாசிவம்



✕ வைரமும் அதனைப் பட்டை தீட்டியவரும்

விலையில் இருப்பதை விடப் பெரிய பாக்கியம் வேறென்ன இருக்க முடியும்?

● ● ●

**எ**ண்பதாண்டு இளைஞர் சதாசிவம் பள்ளிப் பருவத்திலே உபாத்தியாயர்களை அதிசயிக்கும் வண்ணம் ஆங்கிலப் புலமை பெற்றிருந்தார். அந்நாளைய இலக்கிய மேதைகள் பலரின் நூல்களை யெல்லாம் படித்துவிட்டு விமர்சிப்பார். இன்றும் சதாசிவத்திடமிருந்து கடிதம் பெறும் நண்பர்கள், அதைப் படிக்கும்போதே, 'இந்த மனுஷன் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டதால் மாணவர் உலகம் ஓர் அருமையான ஆங்கிலப்பேராசிரியரை இழந்து விட்டது' என்று எண்ணுவார்கள்.

✕ தமிழகத் தலைவர்களின் நண்பர் - இதோ அறிஞர் அண்ணாவுடன்

ஆனால் இந்தத் தேசத்தின் நல்லதிர்ஷ்டம், தியாகிகள் பலர் தோன்றி சுதந்திரத்துக்குப் பாடுபட்டனர்; சதாசிவமும் அவர்களில் ஒருவரானார். சுப்பிரமணிய சிவாவைக் குருவாக ஏற்றார். ''தாய் நாட்டுக்கு உயிரையும் கொடுப்பாயா?'' என்ற அவர் கேள்விக்கு ''இதோ இப்போதே தயார்'' என்று பதிலுரைத்த இளைஞன் சதாசிவம்ஒருவனாகத் தான் இருந்திருக்க முடியும்!

அப்போதெல்லாம் சதாசிவத்துக்கு மட்டுமின்றி வேறு பல இளைஞர்களுக்கும் வன்முறை மூலம்தான் விடுதலை பெற முடியும் என்ற நம்பிக்கை இருந்தது. 'வேல்ஸ் இளவரசர் வரப்போகிறார், அவர் மீது ஒரு குண்டை வீசிவிட்டு உயிரை விட்டுவிடலாம்' என்பது போன்ற எண்ணங்களே மேலோங்கியிருந்த சதாசிவத்தின் இளம் உள்ளம் படிப்படியாகக் காந்தீயத்துக்குக் கட்டுப்பட்டது.

வீதி வீதியாய்ப் பாரதி பாடல்களைப் பாடிச் செல்வதும், கிடைத்த இடத்தில் சாப்பிடுவதும், திண்ணையில் படுத்துறங்குவதும், பொழுது விடிந்ததும் மறுபடி பிரசாரத்தைத் தொடர்வதுமான அந்த வாழ்க்கையில், ''ஒரு கவலை கிடையாது; பரம நிம்மதி!'' என்று சதாசிவம் அபூர்வமாகச் சில சமயம் பழங்காலத்தை நினைவுகூர்ந்து கூறுவார்:

கல்கியும் சதாசிவமும் சந்தித்ததை சுந்தா பொன்னியின் புதல்வரில் எழுதுகிறார்:

> குவாரண்டைன் நாட்கள் முடிந்ததும் கிருஷ்ணமூர்த்தியின் விலங்குகளைக் காவலர் அகற்றி அவரை உட் சிறைக்குள் அனுமதித்தார்கள். அந்தப் பெரிய சிறைக்கூடத்தில் அவர் திக்கு திசை புரியாமல் திகைத்து நின்றபோது களையான முகத்துடன் இளம் கைதி ஒருவர் அவரை அணுகி கைலாகு கொடுத்து, ''நீங்கள் தானே கிருஷ்ணமூர்த்தி? கரூரிலிருந்து வந்தவர்?'' என்று கேட்டு அரசியல் கைதிகளின் பகுதிக்குக் கூட்டிச் சென்றார். அந்த இளைஞர் சதாசிவமும் கிருஷ்ணமூர்த்தியும் அந்தக் கணத்திலிருந்து உயிர் தோழர்களானார்கள்!

சிறை வாசம் (மும்முறை); வெளியே இருந்தால் வீதி வீதியாகக் கதர்ப் பிரசாரம்—

விற்பனை என்றிருந்த நாட்களிலேயே ராஜாஜியின் அபிமானத்தைப் பெற்றார் சதாசிவம்.

ஒரு சமயம், ''நீ ஏன் விகடனில் சேரக் கூடாது?'' என்று கேட்டார் ராஜாஜி.

இதே கால கட்டத்தில் கல்கியிடமிருந்தும் ஒரு தபால் கார்டு வந்தது. ''ஆனந்த விகடன் விளம்பர இலாகாவுக்கு ஒருவர் தேவை என்று வாசன் எண்ணுகிறார். நீங்கள் வந்து பொறுப்பை ஏற்க முடியுமா?''

சென்னை செல்லக் காசில்லாமல் அவர் சோகமாக உட்கார்ந்திருப்பதைப் பார்த்த ஒரு நண்பர் விஷயத்தைத் தாமே புரிந்து கொண்டு ஒரு பத்து ரூபாய் நோட்டை சதாசிவத்தின் ஜேபியில் செருகினார்!

''மாதம் ஐம்பது ரூபாய் தருகிறேன்; ஆறு மாதம் உன் செயல் திறனைப் பார்க்கிறேன்'' என்றார் வாசன்.

''மாதம் 75 ரூபாய் கொடுங்கள்; இரண்டு மாசத்தில் என் திறனைக் காட்டுகிறேன்'' என்றார் சதாசிவம். ''உங்களுக்குத் திருப்தியில்லையானால் நண்பர்களாய்ப் பிரிவோம்!''

இதைக் கேட்டதும் தமக்கு 150 ரூபாய் லாபம் என்று வாசன் கணக்குப் போட்டிருக்கலாம். உடனே வேலை கொடுத்து விட்டார்! ஆனால் அடுத்து வந்த ஆண்டுகளில் அதைப் போல பல நூறு மடங்கு வாசன் லாபம் அடைய வழி வகுத்தார் சதாசிவம்.

விளம்பரங்கள் சேகரிப்பது என்பது ஓர் அபூர்வமான கலை. அசாதாரண ஆற்றலும் வாசாலகமும் தேவைப்படும் கலை. சதாசிவம் இத்துறையில் பிறவிக் கலைஞர். டாட்டா–பிர்லா தொடங்கி பலசரக்குக் கடைக்காரர் வரை அவர் பேச்சினால் கவரப்படாதவர்களோ அவருக்கு விளம்பரம் இல்லை என்று கை விரித்தவர்களோ கிடையாது. 'கேளுங்கள் கொடுக்கப்படும்!' – சதாசிவத்தைப் பொறுத்தவரை!




சதாசிவத்திடம் ஒரு வைரம் கிடைத்தது. அதற்குப் பட்டை தீட்டி ஒளிரச்செய்து தமக்கென்று வைத்துக் கொள்ளாமல் தமிழ்த் தாயின் மணி முடியில் பதித்து அதன் பிரகாசம் உலகமெங்கும் பரவும் வகை செய்தார். கோகினூர் வைரத்தை விட உயர்ந்த தான அந்த வைரத்தின் பெயர்: எம்.எஸ்.

கணவர் முன் வரிசையில் வந்து அமர்ந்து விட்டால் போதும். எம்.எஸ்.ஸுக்குத்தெம்பு வந்துவிடும். ஒரு புன்னகையை உதிர்த்து விட்டாலோ கேட்கவே வேண்டாம்! அதிலிருந்து அலாதியான சக்தி பெற்று உயர்ந்து உயர்ந்து இசைக் கலையின் உன்னதமான சிகரங்களிலெல்லாம் சஞ்சரிக்க ஆரம்பித்து விடுவார்.

நோபெல் பரிசுக்கு இணையான மாக் ஸாய் ஸாய் விருது தொடங்கி எத்தனையோ பல பாராட்டுக்களையும் விருதுகளையும் குவித்துக் கொண்டுள்ள எம்.எஸ்., அந்தப் பெருமைகள் அனைத்தையும் சதாசிவம் பாதங்களிலேயே சமர்ப்பிக்கிறார் என்றால் அது பதி பக்தியினால் மட்டுமல்ல, மெய்யாலுமே அந்தப் பெருமைகள் அனைத்தும் அவருக்கும் உரியன என்று அவர் மனப்பூர்வமாகக் கருதுவதால் தான். நாளுக்கு நாள் எம்.எஸ்.ஸின் இசையில் மெருகேறியது என்றால் மெருகேற்றியவர் சதாசிவம்.

இசையினால்சட்டுவதையெல்லாம்சந்துவிட வேண்டும் என்ற சதாசிவத்தின் கொள்கைக்குத் தொடக்க விழா நடத்தி வைத்ததே இந்தக் கல்கி பத்திரிகைதான்! கல்கி பத்திரிகைக்கு மூலதனம் தேடுவதற்காகவே எம். எஸ். சாவித்திரி படத்தில் நாரதர் வேடம் புனையச் சம்மதித்தார். அதன் பிறகு கணக்கிலடங்கா எத்தனையோ தான தர்மங்கள். ஒரு கல்யாணக் கச்சேரியில் பெறப் போகும் சன்மானத்தை இன்னாருக்குத் தந்து விடுவதென்று தீர்மானித்து அவருக்கு அழைப்பிதழ் அனுப்புவதுடன் நில்லாது, கார் அனுப்பி அழைத்து வரச் செய்து, முதல் வரிசையில் உட்கார்த்தி, மரியாதை பண்ணி அனுப்புவார் சதாசிவம். ஒரு சமயம் கச்சேரி ஏற்பாடு செய்தவர், பழம் பாக்கு வெற்றிலையுடன் சன்மானம் அடங்கிய உறையையும் வைத்துத் தட்டை நீட்ட, சதாசிவம் ஒரு வேத வித்தகரைக் காட்ட, அவரிடம் போய்ச் சேர்ந்து விட்டது. பின்னால் பக்கவாத்தியக்காரர்கள், ''எங்களைக் கவனித்து அனுப்பிவிடுங்கள்'' என்ற போது, கச்சேரி ஏற்பாடு செய்த அந்தத் தனவந்தர், ''அடடா! உங்கள் சன்மானத்தையும் அந்த உறையிலேயே வைத்திருந்தேனே!'' என்றார்! ''போகட்டும், பாதகமில்லை. சதாசிவம் அவர்கள் தயவால் நாங்களும் இன்று தர்மம் செய்தோம்! இல்லாது போனால் நாங்களாகவே இப்படி நடந்துகொள்ளவா போகிறோம்?'' என்று கூறிச் சிரித்தார் கஞ்சிரா நாகராஜன்.

''நீங்கள் தான தர்மம் செய்த செல்வத்தை யெல்லாம் சேர்த்திருந்தால் நிரந்தரப் பயன் தரத்தக்கதொரு பல்கலைக் கழகமே எழுப்பிவிடலாமே'' என்று நான் சதாசிவத்

இடம் ஒருதடவை கேட்டபோது சொன்னார்: ''இதோ பார்! இன்றைக்கு ஒருவன் ஐம்பதுக்கும் நூறுக்கும் கஷ்டப்படுகிறான் என்றால் அவனுக்கு உதவுவதுதான் பெரிது. 'ஐந்து லட்சம் சேர்ந்த பின் தானம் பண்ணுகிறேன்' என்றுசொல்வதில் எனக்குநம்பிக்கையில்லை!''

கல்கி பத்திரிகைக்கு வித்தூன்றி, நீர் வார்த்து, உரமிட்டு வளர்த்த சதாசிவம் 'கல்கி' அவர்களின் மறைவுக்குப் பின் இதன் ஆசிரியராக விளங்கி, இதன் கௌரவத்தையும் மதிப்பையும் புகழையும் மேலும் உயர்த்தினார்.

ராஜாஜி சுதந்திரக்கட்சிதொடங்கியபோது அவருக்குப் பக்கபலமாக இருந்தார். ஜி.டி. பிர்லா ஒரு சமயம் சென்னைக்கு வந்திருந்தபோது ''ராமனுக்கு லக்ஷ்மணன் எப்படியோ அப்படி எனக்கு சதாசிவம்!'' என்று ராஜாஜி பிர்லாவிடம் சொன்னார்.

விளம்பரங்கள் மூலம் சுதந்திரக் கட்சிக்கு நிதி சேர்க்கவும் அதே நேரத்தில் மூதறிஞரின் அரும்பெரும் பணிகளை ஆன்றோர் எழுத அவற்றை நிரந்தர சாசனமாக்கவும் திட்டமிட்ட சதாசிவம், ''ராஜாஜி-93'' என்ற பிறந்த நாள் மலரைத் தயாரித்தார். இதை அவரது மாபெரும் சாதனை என்றே கூறலாம். முதல் இரு பிரதிகளை ராஜாஜியிடம் சமர்ப்பித்தபோது அவர் ஒரு மலரைத் தாமே வைத்துக் கொண்டு மற்றொரு மலரில் பின்வருமாறு எழுதி சதாசிவத்திடமே திருப்பித் தந்தார்:

அன்புள்ள சதாசிவம்,

''உன் வாழ்க்கையின் ஒவ்வொரு நிமிடமும் எனக்காக நீ செய்து வரும் காரியங்களுக்கு உனக்கு எவ்வாறு நான் கைமாறு செய்ய முடியும்? உனக்கும் உன் மனைவிக்கும் ஆண்டவனின் நல் வாசிகளை வேண்டுகிறேன்.''

● ● ●

சதாசிவத்தின் முன்கோபம் அவரைப் போலவே ஜகத் பிரசித்தமானது. கல்கி காரியாலயத்தில், ''பெரியவர் மூட் எப்படி இருக்கிறது?'' என்று ஒரே நாளில் பலமுறை ஒருவரை யொருவர் கேட்டுக் கொள்வது சகஜம்! ஆனால் கோபத்துக்கு உள்ளானவர் தவறு உணர்ந்து வருந்தினால் சதாசிவத்தின் கோபமும் வந்த வேகத்திலேயே மறைந்து விடும் என்பதும் அனைவரும் அறிந்ததே. மறுபடியும் கலகலப்பாகவும் ஹாஸ்யமாகவும் பேச ஆரம்பிப்பார்.

அவரது நகைச்சுவை காரியாலய ஊழியர்களிடமும் இதர நண்பர்களிடமும் மட்டுமின்றி பிரிட்டிஷ் அரசியாரின் கணவர் எடின்பரோ கோமகனிடமும் செல்லுபடியாகிப் பெரிதாகச் சிரிக்க வைத்தது! தமது உச்சிக் குடுமியை நீவி விட்டுக் கொண்டே சதாசிவம் அவரிடம் சொன்னார்: ''இதை அரசியல்வாதிகள் உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டே இருப்பார்கள். எந்தப் பக்கம் காற்றடிக்கிறது என்று அவர்களுக்குத்தெரிய வேண்டும் பாருங்கள்!''

● ● ●

வித்தியாசப்படும் அறிவாற்றல் காரணமாக மனிதர்களிடையே ஏற்றத் தாழ்வு இருக்கத்தான் செய்யும். ஆனால் மனிதாபிமானத்தில் ஏற்றத் தாழ்வுக்கு இடமேயில்லை என்று கருதி அதன்படி செயல்பட்டவர் சதாசிவம். அவர் இல்லத்தில் குடும்பத் தலைவர் இலையில் பரிமாறப்படுவன அனைத்தும் வேலைக்காரர்கள் இலையிலும் பரிமாறப் படவேண்டும்.

கல்கி காரியாலயத்துக்கு விஜயம் செய்த நேருஜிக்கு மலர் மாலை அணிவிக்கத் தோட்டக்காரர் ஏகாம்பரத்தை அழைத்தார் சதாசிவம். நேருஜியோ தோட்டத்தின் அழகிலே சொக்கிப்போய் ஏகாம்பரத்துக்கே மாலையைத் திரும்பவும் அணிவித்தார்.

வருகின்ற பிரமுகர்களிடம் எங்களை அறிமுகப்படுத்தி, ''இவர் விளம்பர இலாகாவைக் கவனிக்கிறார், இவர் விநியோகத்தைக் கவனிக்கிறார், இவர் நிர்வாகப் பொறுப்பேற்றிருக்கிறார்; இவர் எடிட்டோரியல் இலாகாவைப் பார்த்துக் கொள்கிறார்; நான் தோட்டத்தைக் கவனித்துக் கொள்கிறேன்'' என்று கூறுவதில் சதாசிவத்துக்கு ஏற்படும் ஆனந்தம் சொல்லி முடியாது.

எங்கள் அத்தனை பேரையும் கவனித்துக் கொள்கிறவர் அவர்தான் என்பது வந்த பிரமுகருக்குத் தெரியாதா என்ன! மலர்த் தோட்டத்தை மட்டுமின்றி, கலை, இலக்கியத் தோட்டத்தையும் பண்படுத்தி வளப்படுத்தியவர் சதாசிவம். அவரால் பிரபலமடைந்த நாவலாசிரியர்கள், அறிமுகமான எழுத்தாளர்கள் பட்டியல் மிகப் பெரிது.

● ● ●

காஞ்சிப் பெரியவாளிடம் சதாசிவம் தம்பதிக்கு உள்ள பக்தி ஆழமானது. எவ்வளவு ஆழமானது என்றால் அந்தப் பக்தியினால் சதாசிவம் தம்பதிக்கு மட்டுமின்றி லோகத்துக்கே க்ஷேமம் உண்டாகிற அளவுக்கு ஆழமானது!

''மைத்ரீம் பஜத'' எனத் தொடங்கி, ''ச்ரேயோ பூயாத் சகல ஜனானாம்'' என்று முடியும் பாடலை ஐ. நா. சபையில் பாடுமாறு எம். எஸ்.ஸுக்குப் பெரியவாள் யாத்துத் தந்தாரல்லவா? அந்தப் பாடல் அதன் பின்னர் எம். எஸ்.ஸின் ஒவ்வொரு கச்சேரியிலும் இறுதிப் பாடலாக இடம் பெற்று லோக க்ஷேமத்தைப் பரப்பி வருகிறதல்லவா?

இந்த அரும்பெரும் அருட் செல்வத்தை நமக்குப் பெரியவாளிடமிருந்து பெற்றுத்தந்த சதாசிவத்தையும் அவரது வாழ்க்கைத் துணைவியாரையும் சதாபிஷேகத் திருநாளையொட்டி வணங்கி ஆசி வேண்டுவோம்.

மேலட்டை புகைப்படம்: வித்தியாவ்ரதா

வண்ணம்: கல்பனா





அமெரிக்க ஒப்புதலுடன் பிரான்ஸ் யுரேனியம் தருவதில் சிக்கல் ஏற்பட்டுள்ளது!







கல்கி



1982 ஆகஸ்டு 29
துந்துபி ஆவணி 13
மலர் : 41 இதழ் : 5


# உறங்கும் லட்சியங்கள்!

மாங்காடு காமாட்சி அம்மன் கோயிலில் சுதந்திர தினத்தன்று சமபந்தி போஜனத்தில் கலந்துகொண்ட முதல்வர் தெளிவான சிந்தனையுடன் பேசினார்: ''சமத்துவ சமுதாயம் அமைய வேண்டுமானால் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் தங்கள் தாழ்வு மனப்பான்மையை உதறிவிட வேண்டும். தாழ்த்தப்பட்ட வகுப்பினராகக் கருதப்படுவதில் ஆதாயம் இருப்பதால் சிலர் அதை விடமாட்டேன் என்கிறார்கள். அதே சமயத்தில் சமுதாய சமத்துவம் பற்றியும் வாய் கிழியப் பேசுகிறார்கள். இது ஒன்றுக்கொன்று முரணானது.''

முதல்வர் இந்தத் தெளிவான சிந்தனைக்குச் செயலுருவம் தர சட்டப் பூர்வமாக எதையும் செய்ய முடியாத நிலையில் இருக்கிறார் என்றால் காரணம் அரசியல்! அரசு – இயல் என்பது மக்களுக்கு எது நன்மையோ அதைச் செய்வதற்குப் பதில் எது மக்களைத் திருப்திப்படுத்தி வோட்டுப் பெற்றுத் தருமோ அதைச் செய்வது என்றாகிவிட்ட பிறகு உயரிய லட்சியங்கள் சுதந்திர தினம் போன்ற தருணங்களில் மட்டும் பேசப்பட்டு மற்ற நாட்களில் உறங்க வேண்டியதுதான்.

பிரித்தாளும் சூழ்ச்சியில் வல்லவரான பிரிட்டிஷார் இந்துக்களிடையே பிளவு உண்டுபண்ண தாழ்த்தப்பட்டவருக்குத் தனித் தொகுதி என்ற தந்திரத்தை முதலில் கையாண்டனர். இதில் உள்ள ஆபத்தை உணர்ந்த மகாத்மா உண்ணாவிரதம் இருந்தார். அவருடையது லட்சிய நோக்கு. இதற்கும் அம்பேத்காருடைய யதார்த்தப் பார்வைக்கும் மோதல் ஏற்பட்டுப் பிறகு ஒரு வழியாகச் சமரசமும் எரவாடா ஒப்பந்தமும் ஏற்பட்டன.

பாரதக் குடியரசின் அரசியல் சாசனத்திலும் பிற்பட்ட வகுப்பினரின் முன்னேற்றத்துக்கு ஆவன செய்ய வேண்டும் என்ற ஷரத்து இடம் பெற்றுள்ளது. ஆனால் நமது அரசியல்வாதிகள் பிற்பட்ட வகுப்பினர் என்பதற்குப் பிற்பட்ட சாதியினர் என்று அர்த்தம் கற்பித்துவிட்டனர். விளைவு சுதந்திரம் பெற்று 35 ஆண்டுகளுக்குப் பிறகும் தாழ்த்தப்பட்டவர்களாகக் கருதப்படுவதில் உள்ள வசதிகளை உணர்ந்து மேன்மேலும் பல சாரார் தாழ்த்தப்பட்டவர் பட்டியலில் இடம் பெறப் போட்டியிடுகின்றனர். உயர்சாதி இளைஞர்கள் தாழ்த்தப்பட்டவர்களை அணுகி, தங்களை சுவிகாரம் எடுத்துக் கொள்ளுமாறு கேட்கும் அளவுக்கு நிலைமை கேவலமாகி விட்டது.

மண்டல் கமிஷன் அறிக்கையோ தாழ்த்தப்பட்டவருக்கு ஏற்கெனவே உள்ள 22.5 சதம் இட ஒதுக்கீடுக்கும் அதிகமாக மேலும் 27 சதம் ஒதுக்கப்பட வேண்டும் என்று சிபாரிசு செய்கிறது! இதையொட்டி நாடாளு மன்றத்தில் நடந்த விவாதத்தில் 'மைனாரிட்டிகளுக்கு இட ஒதுக்கீடு தேவை' என்று புதிதாக ஒரு கோரிக்கையும் எழுப்பப்பட்டுள்ளது!

சாதி மத பேதமற்ற சமதர்ம சமுதாயம், அனைவருக்கும் அனைத்திலும் சம வாய்ப்பு போன்ற உயரிய லட்சியங்களை நம் அரசியல்வாதிகள் மூட்டை கட்டி வைத்துவிட்டு, சாதிச் சண்டை, மதப் பூசல் போன்றவற்றை மூட்டை அவிழ்த்து விட்டுக் கொண்டிருக்கிறார்கள்!

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# ரவிகுல திலகன்

## 33

கவிஞர்கள் தங்கள் சொற்களுக்குள்ளும் ஓவியர்கள் தங்கள் திரைச்சீலையிலும் அடிமைப்படுத்த எண்ணி முடியாது போகத் தோல்வியை ஒப்புக் கொள்ளச் செய்த பேரெழில் விஜயாலயன் முன் நின்றது.

அவளுடைய ஏமாற்றத்தையோ கோபத்தையோ பார்வையில் புலப்பட்ட வெறுப்பையோ அவன் காணவில்லை. அழகை மட்டுமே பார்த்தான்.

இன்று அலங்காரம் சற்று அதிகமாகவே இருக்கலாம் என்றாலும் இதற்கு முன்பே அவன் பார்த்து அனுபவித்த அழகுருவம் தான். ஆனால் முன்பு அவன் நெருங்கியிருந்தும் அணுக முடியாத தொலைவில் அவள் இருந்தாள். இன்றோ, அவன் விரும்பினால் அந்த அழகுக் குவியலை அள்ளி எடுத்து மடியில் வைத்துக்கொண்டு அணு அணுவாக ரசிக்க முடியும்!

அவன் அவசரப்படவில்லை. விடிய இன்னும் ஒரு சாமம் இருக்கிறதே!

''அன்பே! இப்படி உட்கார்'' என்று மஞ்சத்தைக் காட்டிவிட்டு அதன் அருகில் ஓர் அரியாசனத்தை இழுத்துப் போட்டுக்கொண்டு அமர்ந்தான்.

''இளவரசே! என்னை நீங்கள் விளிக்கும் முறை, காட்டும் மரியாதை இரண்டுமே பொருந்தவில்லை. அடிமையிடம் அன்பும் மரியாதையும்என்ன வேண்டிக்கிடக்கிறது!''

''உத்தமசீலி! சோழ நாட்டின் எதிர்கால மகாராணியான நீயா அடிமை? விஜயாலயன் இதய பீடத்தில் அமர்ந்து அவனையே ஆட்டிப் படைக்கிறவளாயிற்றே!''

''மதுபோதை தலைக்கேறினால் பிதற்றுவார்கள் தெரியும். வெற்றிப் போதைகூட அப்படித்தான் என்று இப்போது புரிகிறது.''

விருட்டென எழுந்து நின்றபோது கோபத்தைத் தாங்காது அரியாசனம் பின்னுக்குச் சாய்ந்தது.

''பெண்ணே! நான் விளையாட்டை விரும்புகிறவன்தான். ஆனால் நீ விளையாட்டின் விதிமுறைகளுக்கு அப்பால் சென்று விபரீதத்தை வருந்தி அழைக்கிறாய்! எச்சரிக்கிறேன்!'' —விரலசைத்தான்.

''நானும் உங்களை எச்சரிக்கிறேன். முத்தரையர் குலம் அவ்வளவு சுலபத்தில் தோல்வியை ஒப்புக்கொள்வதல்ல. நீங்கள் படையெடுத்து வருவதாகத் தெரிந்ததுமே பெரியப்பாவுக்குத் தூது அனுப்பியாகி விட்டது. விடிவதற்குள் சந்திரலேகையிலிருந்து ஒரு பெரும் படை அவர் தலைமையில் இங்கு வந்திருக்கும்.''

ஏளனமாகச் சிரித்து மஞ்சத்தில் அமர்ந்தான். ''வரட்டும்; வந்து ஆவதென்ன?''

''தஞ்சையை மீட்பார்!''

''அசடே!'' என்றான். ''அது எப்படிச் சாத்தியமாகும்? தஞ்சையை முற்றுகையிட்டால் நீ பாதாளச் சிறையில் வாடுவாய் என்பதும் கோட்டையைத் தாக்கத் துணிந்து ஒரே ஒரு சோழ வீரனின் ரத்தம் சிந்தினால் நீயும் உன் அண்ணனும் சிரச்சேதம் செய்யப்படுவீர்கள் என்பதும் முத்தரையனுக்குப் புரியாவிட்டாலும் புரிய வைப்போம்.''

''எங்களுக்குத் தீங்கு நேருமே என்ற பயம் பெரியப்பாவுக்கு இருக்கலாம். ஆனால் அந்தக் கவலை பல்லவேந்திரருக்கு இராது. செய்தி அறிந்ததும் அவர் தமது மேலாதிக்கப் படையை ஏவாதிருப்பாரா? இந்நேரம் காஞ்சி நோக்கிப் பெரியப்பாவின் தூதன் பறந்து கொண்டிருப்பான்.''

''பறக்கட்டும், பறக்கட்டும்! சிறகொடிந்த பறவையாகத் திரும்பி வரட்டும்'' என்று பரிகசித்தான் விஜயாலயன். ''பல்லவ வேந்திரரின் அனுமதி இன்றியா நான் தஞ்சை மீது படையெடுப்பேன்? பல்லவ மாதண்ட நாயகர் பாராசிரயன் என்னைத் தடுத்துநிறுத்தவில்லை; வழியனுப்பி வைத்தார்!''



திடுக்கிட்டாள் உத்தமசீலி. ''இது என்ன வஞ்சனை? எப்படிச் சாத்தியமாயிற்று இது?''

''உன் பெரியப்பா பல்லவ சக்கரவர்த்தியின் அனுமதியின்றிப் பாண்டியனுடன் வர்த்தக உடன்படிக்கை செய்து கொண்டார் அல்லவா? அதற்குத் தண்டனையாகத் தஞ்சையை இழக்கிறார் என்று வைத்துக் கொள்ளேன்!''

''ஒரே சூழ்ச்சிமயம்! பெரியப்பாவை ஏமாற்றி அவரைப் பாண்டியருடன் வர்த்தக ஒப்பந்தம் செய்து கொள்ளத் தூண்டினீர்கள். கலைவிழா என்ற காரணம் காட்டி எங்களையும் இங்கே தந்திரமாக இழுத்து வந்தீர்கள்!''

''நான் வைத்த குறி எதுவுமே பிசக

வில்லை! சோழ நாட்டின் புதிய தலைநகராகத் தஞ்சை விளங்கும். இங்கே நான் அமைக்க விருக்கும் நிகம்பசூதனி கோயில் கும்பாபி ஷேகத்தையும் மன்னரின் மகுடாபிஷேகத் தையும் நடத்தி வைக்கப் பல்லவேந்திரரே நேரில் வருவார். அழைப்பு அனுப்பியிருக் கிறேன்!''

அருவருப்புடன் பார்த்தாள். ''சே! இதெல்லாம் வீரமா? ஒரவஞ்சனை!''

''அது தோல்வியுற்றவர் கூறும் சொல்! வென்றவருக்கு அதன்பெயர் ராஜதந்திரம்!''

மஞ்சத்திலிருந்து எழுந்து நின்று அவள் முன் தன் இரு கரங்களையும் நீட்டினான். ''உத்தமசீலி! வெற்றி பெற்ற நான் தோல்வி கண்ட உன்னிடம் சரணடைகிறேன். என் கைகளை உன் பூங்கரங்களால் பற்றி அன்புத் தளை பூட்டு கண்ணே!''

''சீச்சீ!'' என்று கசப்பை உமிழ்ந்து ஓரடி பின் சென்றாள். உங்களைத் தொடுவதை விடப் பெருநோய்க்காரனைத் தழுவலாம்!''

மிகுந்த பிரயாசைப்பட்டு அவன் இது வரை அடக்கிக் கொண்டிருந்த இயல்பான முன்கோபம் வெடித்துச் சிதறியது. சரே லென்று அவளை நெருங்கித் தோள்களைப் பற்றினான். முகத்தை முகம் நெருங்க, ''பெண்ணே! நாடகமாடுகிறாய்! என்னைக் காதலிப்பதாக ஜெயசிங்கனிடம் நீகூறவில்லை? உன் அண்ணன் என்னைப் பரிகசித்தது கேட்டு நீ சிரித்தது பெரும் தவறு என்று உணர்ந்து விட்டதாகச் சொல்லவில்லை? ஓவியத்தில் என்னைக் கண்டபோது வீரத்தின் அழகைப் புரிந்துகொண்டதாக ஒப்புக்கொள்ளவில்லை? அதற்கும் முன்பாக அராபியன் வேடத்தில் என்னைச் சந்திரலேகையில் நீ சந்தித்தபோது உன் இதயம் படபடக்கவில்லை? அதன் விளைவாக நீ என்னுடன் கப்பலேறி விடவும்



சித்தமாக இருப்பதாகக் கோடிகாட்டவில்லை? இதெல்லாம் பொய்யா?சொல்! பொய்யா?''

அவள் உடலை உலுக்கி எடுத்தான். அவன் நெஞ்சில் கரம் பதித்துத் தள்ளித் தன்னை விடுவித்துக் கொண்டாள். ஆபரணங்கள் சில அறுந்து தொங்கின. ஆடை சற்று விலகியிருந்தது. தலை அலங்காரமும் கலைந்திருந்தது. பதறிய தன் மேனியை நிதானிக்கச் செய்யத் தூணைப் பற்றினாள்.

''நீங்கள் கூறியது அவ்வளவும் உண்மைதான். இப்போது நான் உங்களை அடியோடு வெறுப்பதும் மெய்தான். என் மனத்தில் அரும்பு விட்ட காதல் உங்கள் சூழ்ச்சித் திறனைப் புரிந்து கொண்டதால் மலர்வதற்கு முன்பே கருகியும் விட்டது! உங்கள் விரல்கள் என் உடலைத் தீண்டிய இடங்களில் புழுக்கள் நெளிவது போல் உணர்கிறேன்! போதுமா?''

''உத்தமசீலி! ஏன் இப்படி வன்மத்தை வளர்த்துக் கொள்கிறாய்? இந்த நந்நாளுக்காக நான் யுகம் யுகமாகக் காத்துக்கொண்டிருந்தேன். இந்தப் போர் தொடங்கிய தினத்திலிருந்து உன்னைச் சந்திக்கப் போகிற இந்த வாய்ப்புக்காக எப்படி என் மனம் ஒவ்வொரு நொடியும் ஏங்கியது! வெற்றிக்குப் பின்னர் கவனிக்க வேண்டிய ராஜாங்கக் காரியங்களால் இந்தச் சந்திப்பு சிறிது நேரம் தள்ளிப்போடப்படுவதில் உள்ளூர எத்தனை வேதனை அடைந்தேன்! அத்தனைக்கும் பிறகு இங்கே எவ்வளவு ஆவலோடும் ஆசையோடும் நுழைந்தேன்!''

''தஞ்சையில் கணிகையருக்குப் பஞ்சமில்லை. நீங்கள் விரலைச் சொடுக்கினால் போதும். வரிசையாக வந்து நிற்பார்கள். பிடித்தமானவளைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம்.''

ஆத்திரத்தை அடக்க முடியாமல் அவன் புறங்கையால் அவள் கன்னத்தைத் தாக்கினான். சீண்டி விடப்பட்ட நாகம் போல் அவள் சீறி நிமிர்ந்தாள். கண்களில் தீ கனன்றது.

''விரலசைத்தால் விழுந்து வணங்கும் வேசியை விட வீரம் காட்டி விறைப்பாக நிற்கும் கன்னியைஅடைவதிலேதான் எனக்கு விருப்பம் அதிகம் என்று சொன்னால் என்ன செய்வாய்?'' என்று கேட்டு அவளை இழுத்துத் தள்ளினான். கட்டிலில் விழுந்து கிடந்தவளை நெருங்கினான்.

அத்துமீறித் தான் பேசிவிட்டதையும், அதன் பின் விளைவையும் உணர்ந்த அவள் மேனியைப் பீதி கவ்வியது. தன் உடைக்குள் ஒளிந்திருந்த சிறு கத்தியைக் கண்ணிமைக்கும் நேரத்தில் கரத்தில் எடுத்தாள்.

அதைக் கண்டு அவன் கோபம் அதிகரித்தது. மஞ்சத்தில் அவள் அருகில் முழங்கால் ஊன்றி கத்தியுடன் உயர்ந்த அவள் கரத்தை மணிக்கட்டில் இரும்புப் பிடியில் சிக்க வைத்துப் பின்னால் கொண்டு சென்றான். வலக்கரம் துச்சாதனத் தன்மை பெற்றது. அவள் அழகுகள் மேகத்திலிருந்து விடுபட்ட சந்திரன் போல் பூரண சௌந்தர்யத்துடன் பிரகாசித்தன.

''தஞ்சையை வெற்றி கொள்வது மட்டுமா என் நோக்கம்? இந்த அழகுகளை வெல்ல வேண்டும் என்பதுமல்லவா இரவு பகலாக நான் கண்டு வந்த கனவு'' என்றபோது அவன் குரல் கரகரத்தது. ''அன்பே! என்னை அசுரனாக்காதே! என்னைக் காதலிப்பதாகக் கூறு! தயவு செய்து சொல்லிவிடு!''

''அபலை ஒருத்தி தனித்திருக்கும் அறையில் துராசையோடு நீ நுழைந்தபோதே அரக்கன் என நிரூபித்துக் கொண்டு விட்டாய்.''

''நான் துராசையோடு இங்கு வரவில்லை. அதனை உன் அகம்பாவம் என்னிடம் வளர்த்து விட்டது!''

''நீங்கள் சொல்லலாம்; நான் நம்ப வேண்டுமே?''

''வேண்டாம். நம்ப வேண்டாம். அரக்கன் நான் என்று தீர்மானித்து விட்டாய் அல்லவா? இனி நான் அதற்கேற்ப நடந்து கொண்டால் என்ன?'' என்று கூறிக் கத்தியைப் பிடுங்கி எறிந்தான். நெளிந்து தன்னை விடுவித்துக்கொள்ளப் போராடியவளைமுரட்டுத்தனமாக அணைக்க அள்ளினான்.

அடுத்த கணமே தயங்கி அவளை மீண்டும் மஞ்சத்திலேயே கிடத்திவிட்டுக் கண்ணீர் மல்க எழுந்து நின்றான். தள்ளாடிச் சென்று கீழே உருண்டிருந்த அரியாசனத்தை நிமிர்த்தி வைத்து அதில் அமர்ந்து தலை குனிந்தான். வெடித்து வரும் அழுகையைக்

## மின்சாரம் இல்லாத மின்சார அலுவலகம்!

கேரள மாநிலம் 'கண்ணங்குழி' என்ற ஊரில் உள்ள மின்சார அலுவலகம் பத்து வருடமாக இயங்கி வந்தபோதும் இன்னும் அந்த அலுவலகத்தில் மின்சார வசதி இல்லை. கெரசின் விளக்கு உபயோகிக்கிறார்கள். இன்னும் ஒரு ஆச்சரியம் என்னவென்றால் 'பொறிங்கல் குத்து' 'சோலார்' இவற்றின் மின் உற்பத்தித் திட்டங்களின் வேலைகளும் அந்த அலுவலகத்தில்தான் நடைபெறுகின்றன.

ஆதாரம்: 'வண்டே'

தகவல்: கணியூர் இப்ராஹீம்





"துள்ளும் அவர்கள் ஆர்வத் திறமை
உள்ளம் நிறையும் உங்கள் பெருமை!"



கட்டுக்கடங்கா ஆர்வத்துடிப்பு,
கனி துள்ளும் மோகம்—அதிலே
கண்டு கொள்ளுங்கள் மால்டோவா
குழந்தைகளை—வாழ்விலே
அவர்கள் தொட்டதெல்லாம்
வெற்றி, உற்சாக வேட்டை!

இன்சுவை ததும்பும் மால்டோவா—
புரதங்கள், வைட்டமின்கள்,
உலோக தாதுக்கள் நிறைந்தது—
பருகும் உங்கள் குழந்தைகளுக்கு
மட்டற்ற ஆர்வத் துடிப்பு, சிட்டுப்
போல் சுறுசுறுப்பு!

அப்புவுடன் இணைந்தபின் இவர்
களது சுறுசுறுப்புக்கு எல்லையும்
உண்டோ!!




Monde (உலக) தரத் தேர்வில்
'பாமீஸ்ஸ்' உடன் கூடிய
தங்க மெடல் பெற்றது.
ஆம்ஸ்டர்டாம், 1981.




வைட்டமின்கள் கூடிய

**மால்டோவா**

ஆரோக்கியம் பலம் மற்றும் சக்திக்கு

ஏசியாட் ஆரோக்கிய
பானம்

**JIL** ஜக்தஜித் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

கட்டுப்படுத்த முடியாமல் அவன் தோள்கள் குலுங்கின.

அவள் அதிசயித்தாள். ஒன்றும் புரியாமல் எழுந்து அமர்ந்தாள். கட்டிலை விட்டிறங்கி உடைகளைச் சரிசெய்து கொண்டாள். மெதுவாக நடந்து தரையில் வீசப்பட்டிருந்த குத்தீட்டியை எடுத்துக்கொண்டாள். அவனைக் குறிபார்க்கவும் செய்தாள். அவன் இருந்த இடத்தை விட்டு அசையவில்லை. அழுகையில் அவன் உடல் குலுங்குவதும் நிற்கவில்லை.

கத்தியை மஞ்சத்தின் மேல் விட்டெறிந்தாள் உத்தமசீலி. மெல்ல அவனை நெருங்கி முதுகை வருடி ''அன்பே!'' என்றாள்.

குளமாகியிருந்த கண்ணால் அவளைத் திரும்பிப் பார்த்தான்.

''உத்தமசீலி! நீதானா சொன்னாய்? அன்பே என்று அழைத்தாய்!''

''ஆமாம்! வஞ்சிக்கப்பட்டதாக எண்ணும்போதே அதைச் சாதித்த உங்கள் ஆற்றலை மதிக்காதிருக்க முடியவில்லை. விகாரமானவர் என்று நினைக்கும்போதே வீரத்தை வணங்காதிருக்கவும் முடியவில்லை. என் வாய் வெறுப்பை விஷமாகக் கக்கினாலும் மனச்சுனையிலிருந்து பெருகும் காதல் அமுதத்தை அதனால் களங்கப்படுத்த முடியவில்லை. நான் என்ன செய்வேன்?'' என்றாள்.

அவள் வலக் கரத்தைப் பற்றிக் கன்னத்தில் ஒற்றிக் கொண்டு மிருதுவாக வருடச் செய்து, பின்னர் வற்புறுத்தலாய் இழுத்து அவளைத் தன் எதிரே கொண்டு வந்தான்.

அவள் அழகிய நயனங்கள் நீர்த்திரையிட்டதால் எண்ணெய் வார்க்கப்பட்ட தீபங்கள் போல் புத்தொளியுடன் பிரகாசித்தன. அவன் முன் மண்டியிட்டு மடியில் தன் தலை சாய்த்தாள்.

அவனும் மன விகாரங்களைக் கழுவிக் கண்ணீரை வெளிப்படுத்தினான். அது துயரக் கண்ணீரா ஆனந்தக் கண்ணீரா என்று புரியாமல் தவித்து அவள் தலையை வருடினான்.

தன் கைகளில் உதிர்ந்து தெறித்த கண்ணீரைப் பார்த்துவிட்டுப் பேசினாள்: ''என்ன நேர்ந்தது? ஏன் அழுகிறீர்கள்? ஜெயசிங்கனை எண்ணியா?''

''அதுவும்தான்'' என்றான். ''நண்பனின் மரணம் என்னை ஆவேசம் கொண்டவனாக்கியது. பழிவாங்க மனம் துடித்தது. உன் ஆணவப் பேச்சு ஆத்திரத்தை மேலும் கிளப்பியது. விகசித்த உன் அழகு என் உடலுக்கு வெறியூட்டியது. அன்பே! என்னை மன்னிக்க முடியுமா உன்னால்?''

''என்னை மன்னிக்க உங்களால் ஆகுமென்றால் உங்களை மன்னிக்க நான் தகுதி பெறுவேன்.''

''ஒரு பெண்ணை ஒரு நாள் பலவந்தமாக அனுபவிக்கலாம். வாழ்நாள் முழுவதும் அவள் வெறுப்பைச் சம்பாதித்துக் கொள்ளவும் செய்யலாம். ஆனால் நான் என் வாழ்நாள் முழுவதும் உன்னிடம் எதிர்பார்ப்பது அன்பை அல்லவா? நல்லவேளை அறிவு விழித்துக் கொண்டது. வெறியை வெற்றி கொண்டது.''

''எப்படி அந்த விழிப்பு ஏற்பட்டது?''

''சொல்லவா? நீ சிரிக்கக் கூடாது!''

''சத்தியமாய்ச் சிரிக்க மாட்டேன்.''

''அப்படியானால் கேள்: தஞ்சைக் கோட்டையைத் தாக்கக் கட்டளை இடு முன்னர் கடைசி கடைசியாக நான் என் வீரர்களுக்குத் தந்த அறிவுரை என்ன தெரியுமா? 'தஞ்சை நம் வசமாவது உறுதி. அந்த வெற்றியில் பெருந்தன்மை காட்டுங்கள். தஞ்சைவாசிகள் இனி நம் தலைநகர்வாசிகள். அவர்கள் உடைமைகளைச் சூறையாடினால் பழையாறையில் வாழும் நம் சகோதரர்களின் இல்லங்களைக் கொள்ளையடித்ததாகத்தான் ஆகும். குடும்பப் பெண்களையெல்லாம் சகோதரிகளாக எண்ணுங்கள். யாரிடமும் வரம்பு மீறாதீர்கள்' என்று சொல்லியிருந்தேன். அந்த அரச ஆணையை மீறும் முதல் வீரன் நானேதான் என்று எண்ணியபோது அவமானம் தாங்க முடியாததாகி விட்டது. சோழ மன்னர் குலத்தின் பாரம்பரியப் பெருமைக்கு இழுக்குத் தேடலாமா நான்?''

இந்தச் சமயம் அறைக் கதவு பலமாகத் தட்டப்படும் சத்தம் கேட்டது. ''இளவரசே! இளவரசே!'' என்ற குரல் ஓங்கியும் அவசரமாகவும் ஒலித்தது.

பரபரப்புடன் எழுந்து, தான் நீக்கிக் கதவைத் திறந்தான் விஜயாலயன். வெளியே தீப்பந்த ஒளியில் தளபதி அரையன் முகம் பதற்றத்தில் கலங்கிக் காணப்பட்டது.

(தொடரும்)

அரசன்: ''திருடன் மாதிரி வேஷம் போட்டுக்கிட்டு நேற்று நள்ளிரவு நகர சோதனைக்குப் போனபோது அதிர்ந்து போயிட்டேன்!''

அமைச்சர்: ''ஏன் அரசே?''

அரசன்: ''ஒரு திருடன் அரசன் மாதிரி வேஷம் போட்டுக்கிட்டுத் திருடறதுக்காகப் பதுங்கிப் பதுங்கிப் போய்க்கிட்டிருந்தான்!''

—உ. ராஜாஜி





# இந்துமதி

எழுதும்

புதிய தொடர் கதை

# மண்ணில் தெரியுமோ வானம்?



# கல்கி

செப்டம்பர் 12உ

இதழில் ஆரம்பம்

# வட்ட மேஜை



● வட்டமேஜையில் மன்னார்குடியில் ஒருவரை பார்ப்பனியத்தின் விரோதிகள் தாக்கி விட்டதாக எஸ். கல்யாணராமன் எழுதியிருந்தார்.

மன்னார்குடியில் நடந்தது என்ன என்பது பற்றி மன்னார்குடி நகர திராவிடர் கழகத் தலைவர் திரு எம். அழகர்சாமி 'விடுதலை' இதழில் எழுதியுள்ளார். அதன்படி ராஜகோபால அய்யரை அடித்தவர் அந்தப் பகுதியில் உள்ள குப்புசாமி என்பவர். அதுவும் ஜவுளி வியாபாரம் சம்பந்தப்பட்ட தகராறில் அடித்துள்ளார்.

சென்னை-61 — தேசன்

**அடித்தவர் யாராயினும் அடித்தவர்களிடமும் கோபாலய்யர் காட்டிய அன்பு போற்றுதற்குரியது.**

**-ஆர்]**

● முன்னாள் மந்திரி சுப்பிரமணியத்தின் யோசனைகளால் மட்டும் உண்மையான சுதந்திரமும் சுபிட்சமும் வந்து விடாது என்று எடுத்துக் கூறி ஆளும் கட்சி ஒத்துழைப்பின்றி சுப்பிரமணியத்தின் யோசனைகள் கவைக்குதவாதவை என்று தெளிவான சிந்தனையுடன் எழுதியுள்ளீர்கள்.

ஆளும் கட்சியாக ஒரே கட்சியே தொடர்ந்து பதவியில் இருந்து கொண்டு வருவதுதான் பிரச்னை. ஏகபோக்கியம் என்ற வார்த்தை பொருளாதாரத்துக்குமட்டுமே பயன்படுத்துவது சரியல்ல. அரசியலுக்கு இன்னும் இந்தச் சொல் அதிகமாகவே பொருந்தும். அதனால்தான் அமெரிக்காவில் கூட மறு முறைக்கு மேல் ஜனாதிபதி தேர்தலுக்கு நிற்கக் கூடாது என்று சட்டம் செய்து விட்டார்கள். அதுபோல் நமது அரசியல் நிர்ணயச் சட்டத்தைத்தயாரித்தவர்கள் பிரதமர் விஷயத்தில் ஒரே ஒரு விதி சேர்த்திருப்பார்களேயானால் இன்று இந்நாட்டின் விதியே தலைகீழாக மாறியிருக்கும்.

சென்னை-1 — வைரவன்

● நம் நாட்டில் நடந்து வரும் தற்போதைய தேர்தல் முறை மாற்றி அமைக்கப் பட்டால்தான் நாடு பொருளாதார முன்னேற்றம் அடையும் என்பதைத் தெளிவாக்கியது 'என்று தணியும் சுதந்திர தாகம்' தலையங்கம். இப்போதைய மத்திய அரசு தலையங்கத்தில் குறிப்பிடப்பட்டுள்ள யோசனையை ஏற்றுக்கொள்ளுமா என்பது சந்தேகந்தான். இப்போதைய தேர்தல் முறையால் நாட்டில் எப்படிப்பட்ட ஊழல்களெல்லாம் நடக்கிறது என்பதையும், ஊழல்களுக்கு எவரெல்லாம் உடந்தையாக இருக்க வேண்டியுள்ளது என்பதையும் அப்பட்டமாக எடுத்துரைத்துத் தலையங்கம் எழுதிய விதம் பாராட்டும்படியாக இருந்தது.

பாண்டமங்கலம் — பூவை தங்கராசு

● கார்ட்டூனிஸ்ட்டுகளின் பார்வையில் சுதந்திர தின விழா அருமை. குறிப்பாக ஜெ....., ராமு ஆகியோரின் கார்ட்டூன்கள் மிகவும் அர்த்தமுள்ளவையாக இருந்தன.

கோபி — இளஞ்சேரன்

● எங்கள் வட்டாரத்தில் பல விவசாயிகளின் குடும்பங்களில் நிலவும் சமூக அவலத்தை விடை இல்லா விடுகதைகளாய்ப் படம் பிடித்துக் காட்டியிருக்கிறார் கோபிநாத ஆத்ரேயன். பாராட்டுக்கள்!

செங்கவல்லி — இ. முருகவேள்

● எனது திருமணத்தில் ஒவ்வொரு சாங்கியமாகச்செய்து ஹோமத்தில் இருந்துவரும் புகையின் எதிரே போட்டுப் போரடிக்கிறார்களே என நான் நினைத்தது எவ்வளவு தவறு என்பதைக் கட்டுரையைப் படித்துப் புரிந்து கொண்டேன். கல்யாணமே வைபோகமே பயனுள்ள தொகுப்பு

பரசலூர் — என். புலவு நாகராஜன்

● உண்மையைச் சொல்கிறேன். 'அருள் வாக்கு' படிக்கும் அளவு அறிவு முதிர்ச்சியில்லை என நினைத்துப் படிக்காமலிருந்தேன். ஏழு துணுக்கைக் கண்டு பிடிக்கத் தற்செயலாய் 'அருள்வாக்கை' படித்ததுமே மெய் சிலிர்த்தது. 'கணக்குப்பிள்ளை' என்ற பதத்துக்கு சுவாமிகள் தந்த விளக்கம் அற்புதம். இனி அருள்வாக்கை வாரா வாரம் படிப்பதே என் வேலை.

மதுரை — ரவிராஜ்

● நாடி தளர்ந்து நிற்கும் இன்றைய இளைஞன், முஷ்டியை உயர்த்திச் சாதனைகளைச் செய்ய வைப்பது பெற்றோரின் கையில்தான் இருக்கிறது என்பதை அவர்களுக்குத் தக்க சமயத்தில் குடும்பம் ஒரு கதம்பம் மூலமாக உணர்த்தி இருட்டில் இருக்கும் இளைஞர்களுக்கு நம்பிக்கை ஒளி காட்டியிருக்கிறீர்கள்.

சென்னை-63 — எல். ரவிசங்கர்

● பாரதி கவிதை வரிகளைக் கொண்ட சிறுகதை — சிறுகதைக்குப் பாரதி கவித் தலைப்பு போன்ற நூதன போட்டிகளைக் கண்டு பாராட்டுகிறேன். பாரதி புகழ் பரப்பும் நற்பணிகள் இவை என்பதில் சந்தேகமில்லை. பாரதி இலக்கியக் கவிதைகளில் வாசகர்களுக்கு ஈடுபாடும் ஒருவித பாசமும் உண்டாக இந்த மாதிரி முயற்சிகள் துணைபுரியும்.

சென்னை-18 — கே. ராமமூர்த்தி

# உள்ளும் புறமும் உயர்சிறப்பு




* தனிச்சிறந்த ஃபாக்டரி ஸீல்
* நீடித்த உழைப்பு
* கசிவில்லாதது

# பிலிப்ஸ் பாட்டரிகள்

டார்ச்சு, டிரான்சிஸ்டர்களுக்கு உங்கள் முதல் விருப்பம்; உலக தர எலக்டிரானிக் பொருள்களைத் தயாரிப்போர் அளிக்கிறார்கள்.

பிலிப்ஸ்—ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்

HTB-PEI-7910




## பிலிப்ஸ்

பைகோ எலக்ட்ரானிக்ஸ் அண்ட் எலக்ட்ரிகல்ஸ் லி.

# கை



அபர்ணா நாயுடு

**கா**லையில் பால்காரன் வந்தபோதுதான் அவள் இறந்து கிடந்தது தெரிந்தது.

கேட்டைத் திறந்து, முன்னால் இருந்த சின்னஞ் சிறு தோட்டத்தைக் கடந்து, கதவை நெருங்கிய அவன் தற்செயலாக இடதுபுறம் திரும்பிப் பார்க்க—

அவள் அலங்கோலமாக விழுந்து கிடந்தாள்.

அதிர்ச்சியோடு அருகே ஓடினான்.

துணி கலைந்து, அரை நிர்வாண நிலையில், விழிகள் பீதியை வெளிப்படுத்தி நிலைகுத்தி நிற்க, ரத்தப் படுக்கையில் விரிந்துகிடந்தாள்.

அரை அடி உயரமே இருந்த அந்தச் சின்னஞ் சிறிய 'சிட் அவுட்' அவன் பார்வையில் பதிந்தது.

'இதிலேருந்தா அந்த அம்மா விழுந்துட்டாங்க? எப்போ? ராத்திரியா?' — மனத்தில் எழுந்த கேள்விகளை அப்படியே அழுத்தி விட்டு, அந்த இடத்திலிருந்து ஓடினான்.

நான்கைந்து வீடுகள் தாண்டி ஒரு பங்களாவை நோக்கி டெலிபோன் வயர்கள் சென்று கொண்டிருந்தது பார்வையில் பட, விரைந்து சென்று அந்த வீட்டின் பஸ்ஸரை அழுத்தினான்.

**அ**ரை மணிக்குப் பிறகு போலீசார் வந்து சேர்ந்தபோது, அந்த அதிகாலை நேரத்திலும் அங்கே ஒரு சிறு கூட்டம் கூடியிருந்தது.

உதவியாளர்கள்பின்தொடரஜீப்பைவிட்டு இறங்கி வேகமாக வந்த இன்ஸ்பெக்டரைப் பார்த்ததும் கூட்டம் வழி விட்டது.

அந்தப் பெண்ணை, அவள் விழுந்துகிடந்த நிலையைச் சற்று நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த ஜோ மெல்லத் திரும்பினார்.

'இருபது வயசு இருக்கும். இப்பத்தான் கலியாணம் ஆகியிருக்கணும். தாலிச்சரடு மஞ்சள் அழியாம முறுக்குக் கலையாம விண்ணுனு புதுசா இருக்கு....' என்று நினைத்தார்.

பின் கூட்டத்தை நோக்கிப் பார்வையை ஓட்டினார்.

''இதிலே போன் செஞ்சது யாரு?'' என்று கேட்டார்.

பால்காரன் சற்றுத் தயக்கத்துடன் முன்னால் வர, அவனை ஒரு ஓரமாக ஒதுக்கிடத் துக்குக் கொண்டு போனார்.

''உம் சொல்லு'' என்றார்.

''அதான்போனிலேயேசொல்லிட்டேனே'' என்றான் அவன்.

''என்ன சொல்லிட்டே? பாடியைப் பார்த்ததைச் சொன்னே! இன்னும் எவ்வளவோ விவரங்கள் இருக்கேப்பா!''

அவன் விழித்தான்.

சற்றுத் தள்ளி நின்ற கூட்டத்தைப் பார்த்தார். உயரமாக இருந்த ஒருவர் — நரைத்த தலையுடன், கனத்த பிரேம் கொண்ட மூக்குக் கண்ணாடியுடன் — வேஷ்டி ஜிப்பா, வாக்கிங் ஸ்டிக்குடன் — பார்த்த மாத்திரத்தில் மரியாதையை வரவழைக்கும் தோற்றத்துடன் சற்று ஒதுங்கி நின்று கொண்டிருந்தது அவர் கவனத்தைக் கவர, அவரை நோக்கிப்போனார்.



''சார் யார்னு தெரிஞ்சுக்கலாமா?'' என்றார், ஒரு மேலதிகாரியிடம் பேசும் குரலில்.

''நான் பக்கத்து வீட்டிலேதான் இருக்கேன், இன்ஸ்பெக்டர்! நீங்க அவன் கிட்டே முடிச்சுட்டு வாங்க...''

பால்காரனிடம் திரும்பி வந்தார் ஜோ. அவரிடம் ஒரு அவசரம் தெரிந்தது.

''இங்கே எத்தனை நாளாப் பால் ஊத்தறே?''

''இருபது நாளாத்தாங்க.''

''அதுக்கு முந்தி? வேறே யாராவது ஊத்திக்கிட்டிருந்தாங்களா?''

''இல்லிங்க. இவங்க இப்பத்தான் புதுசா குடித்தனம் வந்தவங்க.''

''இவங்கன்னு எத்தனை பேரு?''

''இந்த அம்மாவும் இவங்க புருஷனும்.''

''ரெண்டே பேர்தானா?''

''ஆமாங்க.''

''காலேலே உங்கிட்டயிருந்து யாரு பால் வாங்கறது?''

''அந்த அம்மாதான் வாங்குவாங்க. ஒரே ஒரு நாள்தான் அவரு வாங்கினாரு. அன்னிக்கு இந்தம்மாவுக்கு உடம்பு சரியில்லேன்னாரு.''

''அவரு எப்படி இருப்பாரு?''

''சிவப்பா, உசரமா இருப்பாரு. பயில்வான் மாதிரி உடம்பு. கிராப், மீசை எல்லாமே உண்டுங்க.''

''நேத்து முந்தாநாள் யாரு பால் வாங்கினாங்க?''

''அம்மாதாங்க. ஆனா அளவைத்தான் குறைச்சுட்டாங்க.''

''ஏன் அப்படி?''

''ஐயா ரெண்டுநாளா ஊரிலேஇல்லேன்னாங்க. இன்னிக்கு வந்துடுவாருன்னாங்க. பாவம், அவரு திரும்பி வரப்போ இவங்களை இந்த நிலையிலேபார்த்தாருன்னா... பாவம்!''

''சரி சரி. அந்தக் கான்ஸ்டபின் கிட்டே உன் விலாசத்தைக் கொடுத்திட்டுப் போ. சாயங்காலம் ஸ்டேஷனுக்கு வா... என்ன?''

''வரேங்க. ரொம்ப நன்றிங்க...''

அவன் போவதற்காகவே காத்திருந்தவரைப் போல அந்தப் பெரியவர் ஜோவை நோக்கி வந்தார்.

''இன்ஸ்பெக்டர்! என் பேரு ராமசேஷன். செண்டர்லே ஹோம்லே அண்டர் செக்ரடரியா இருந்து ரிடையர் ஆனவன். ஒரே ஒரு விவரம் உங்க கிட்டச் சொல்லணும். அதுக்குத்தான் காத்துக் கிட்டிருந்தேன். சீக்கிரம் அனுப்பிட்டீங்கன்னா நல்லது. நான் வாக்கிங் போகணும். இட்'ஸ் ஆல்ரெடி லேட்'' என்றார் அவர்.

ஜோவின் பார்வையில் மரியாதை கூடியது.

''சார் டெய்லி வாக் போறது உண்டா?''

''யெஸ். எனக்குக் கொஞ்சம் டயாபெடிஸ் உண்டு. டாக்டர் அட்வைஸ். நைட்லே அடிக்கடி பாத்ரூம் போவேன். அந்த மாதிரி நேத்துப் போகும்போது தற்செயலா இந்த மாடியைப் பார்த்தேன்.

சன்னல் வழியா பெட்ரூம் விளக்குஎரிஞ்சது தெரிஞ்சது. கவனிக்கப் பார்த்தேன். புருஷன் ஊரிலே இல்லே இந்தப் பொண்ணு தனியா வீட்டைப் போட்டுக்கிட்டு என்ன செய்யுதுன்னு நான் யோசிச்சுக்கிட்டிருக்கும் போதே யாரோ ஒருத்தன் சன்னல் பக்கம் நகர்ந்தது தெரிஞ்சது.''

''அவன் எப்படி இருந்தான் சார்?''

''முகம் தெரியலே. சன்னலுக்கா முதுகைக் காட்டிக்கிட்டிருந்தான். அவனுக்கப்பாலே அந்தப் பொண்ணு நின்னுக்கிட்டு, பெரிசா சிரிச்சுக்கிட்டு... புருஷன் ஊரிலே இல்லாத நேரத்துலே... பார்க்கறதுக்கே ரொம்ப அருவருப்பா இருந்தது இன்ஸ்பெக்டர்...''

''தாங்க்யூ ஸார். நான் புரிஞ்சுக்கிட்டேன்'' என்றார் ஜோ.

புகைப்படக்காரர்கள் வந்து சேர்ந்தார்கள். அவர்களை உடல் கிடந்த பகுதிக்கு அனுப்பிவிட்டுக் கதவை நோக்கிப் போனார் ஜோ.

அழுத்தியபோது உட்புறம் தாளிட்டிருந்தது தெரிந்தது. தோட்டத்தில் நடந்து, வீட்டைச் சுற்றிக் கொண்டு போய், பின்புறத்தை அடைந்தார். அங்கேயும் ஒரு கதவு... அதை அழுத்தியபோது—

திறந்து கொண்டது.

உள்ளே நுழைந்தார். யோசித்தவாறே நடந்தார்.

ஹாலின் ஒரு ஓரத்திலிருந்து மேலே ஏறிய படிக்கட்டுகளில் பார்வையைச் செலுத்தினார்.

கடைசிப் படிக்கட்டில் விழுந்து கிடப்பது என்ன?

விருட்டென்று போய்க் குனிந்து அதை எடுத்தபோது—

ஒற்றை க்ளவுஸ். மருத்துவர்கள் அணிவதைப் போன்றது. சருமத்தின் நிறத்தில், மிருதுவாக, மினுமினுப்பாக....

ஜோவின் சிந்தனை தடைப்பட்டது.

உள்ளங்கைப் பகுதியில் கீற்றாக ஏதோ ஓடியிருப்பதைக் கவனித்தார். அதன் உள் பக்கத்தைப் பிரித்துப் பார்த்தபோது—

மனைவி: பிச்சைக்காரன் கிட்டே அவ்வளவு நேரம் என்ன பேச்சு?

கணவன்: இவன் கைராசிக்காரப் பிச்சைக்காரனும், இவன் வாங்கிக் கொடுத்த பரிசுச் சீட்டுக்குப் பரிசு விழுந்திருக்காம். அதுதான் நமக்கும் இரண்டு பரிசுச் சீட்டு வாங்கிட்டு வரச் சொன்னேன்.

—எம். வி. செல்லம்



சிவப்பாக ஏதோ தீத்தியிருக்க—

மேலும் யோசித்தவாறே அதைச் சுருட்டிப் பாக்கெட்டினுள் போட்டவராகப் படியேறத் தொடங்கினார்.

வாசலில் டாக்சி வந்து நிற்க, அதிலிருந்து இறங்கியவன் — சிவப்பாக, உயரமாக, கோரா மீசையுடன் பயில்வானைப் போல... ஓ! ஓ! இறந்துபோனவளுடைய கணவன் ஊரிலிருந்து திரும்பி விட்டான்!

வேகமாகத் திரும்பிக் கீழே வந்தார்.

கூடியிருந்தவர்கள் அவனைக் கட்டுப்படுத்த முயல, அவன் தன் மார்பில் அறைந்து கொண்டு, ''ஷீலா! இப்படிச் செஞ்சுட்டியே நான் இனிமே என்னம்மா செய்வேன்? நீ இல்லாமெ எப்படிம்மா இருப்பேன்?'' என்று கதறிக் கொண்டிருந்தான்.

அவனை ஆசுவாசப்படுத்தி மெல்ல வீட்டுக்குள் அழைத்து வந்தார் ஜோ.

''மிஸ்டர்! நடந்தது நடந்து போச்சு. உங்களுக்கு இது பெரிய அதிர்ச்சிதான். திடீர்னு இப்படி ஒரு ஷாக் ஏற்படும் போது, நாம எதுக்காக உயிர் வாழணும்கிற எண்ணம் கூட ஏற்படும். அந்த மாதிரி அசட்டுத் தனத்துக்கு இடம் கொடுக்கக் கூடாது. ஓ.கே?''

''யெஸ்.''

''ப்ராமிஸ்?'' என்று கையை நீட்ட,

''யெஸ் ப்ராமிஸ்'' என்று அவன் தன் கையையும் யந்திரமாக நீட்ட—

அதைப் பற்றிக் குலுக்கினார். அதிர்ச்சியில் வியர்த்து அவனுடைய உள்ளங்கை பிசுபிசுப்பதை உணர்ந்தார் ஜோ. மனம் எல்லாம் அந்தப் பெண்ணைப் பற்றியே நினைத்துக்கொண்டிருக்க, கைக்குட்டையை எடுத்துக் கையைத் துடைத்துக் கொண்டார்.

மேஜைமேல் நாளிதழ் கண்ணில் பட்டது.

அன்று காலையில் கூட ஐந்து மணிக்கே எழுந்துகொண்டு காப்பியைக் குடித்த பின் தினசரிப்பத்திரிகைக்காகக் காத்துக்கொண்டு உள்ளுக்கும் வாசலுக்குமாய், அலைந்து-கொண்டு தொலைவில் பேப்பர் பையன் சைக்கிளில் வருவதைப் பார்த்து விட்டு வாசலுக்கே வந்து நின்று, வந்து கொண்டிருந்த பையன் சட்டென சைக்கிளை நிறுத்தி வானத்தைப் பார்ப்பதைக் கண்டு இவரும் அண்ணாந்து பார்த்தார்.

அவருக்குத் திரும்பவும் சிரிப்பு வந்தது. 'விமானத்தை வேடிக்கை பார்ப்பதற்கு வயது வித்தியாசம் கிடையாது போலிருக்கிறது' என்று நினைத்த ஜோ சட்டென்று சுறுசுறுப்படைந்தார்.

கையில் எடுத்த பத்திரிகையைப் பார்த்தார். இந்தப் பத்திரிகையைப் போட்ட பையன் விமானம் பறந்தபோது எங்கே இருந்தான்? அவன் விமானத்தைப் பார்த்தானா?

''ஏம்பா! பிளேன் பறந்தா பார்க்கறது உண்டா?''

கடைக்காரன் திகைத்தான். ஒரு போலீஸ் அதிகாரி கேட்கிற கேள்வியா இது? அதுவும் திடுதிப்பென்று வந்து?

''ஆமாங்க.''

''இன்னிக்குக் காலையிலே அந்த மணி சுமாருக்குப் பறந்ததே பார்த்தியா?''

சட்டென ஏதோ நினைவுக்கு வர, அவன் முகம் மாறியது.

''அதோ... அங்கே மாடியிலேருந்து ஒரு பொண்ணு கீழே விழுந்து செத்திருச்சே... அந்த வீட்டாண்டை போனப்போதான் பார்த்தேன்.''

''பிளேனை மட்டும்தான் பார்த்தியா... இல்லே....''

''அந்தப் பெண்ணையும் பார்த்தேன். அந்தப் பொண்ணும் பால்கனிக்கு வந்து விமானத்தைப் பார்த்தா. அப்போ ஒரு ஆம்பிளை வந்து பின் பக்கமாக் கட்டிப் பிடிச்சாரு. வேலை கெட்ட வேலையிலே விரசம்... விருட்டுனு அங்கேருந்து போயிட்டேன்.''

''அந்த ஆள் எப்படி இருந்தான்?''

''முகம் தெரியலே. கை மட்டும்தான் தெரிஞ்சது. வலது கை. அதிலே உறை போட்டிருந்தாரு....''

திரும்பி வந்தபோது ஜோவுக்கு ஏதோ புரிவது போல இருந்தது. இன்னதுதான் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாவிட்டாலும் தான் முடிவை நோக்கிப் போகும் உணர்வு அவருக்கு ஏற்பட்டது.

கிளவுஸில் இற்றியிருந்த ரத்தம்—

கைகுலுக்கினபோது உணர்ந்த பிசுபிசுப்பு; கைக்குட்டையில் லேசாகத் தெரிந்த ரத்தக் கறை—

இவை போதாது. உண்மை தெரிவதற்கு இன்னும் ஒன்று தேவை. அதிர்ச்சி!

வேகமாக அந்த வீட்டை அடைந்த ஜோ நடையில் சமையல் அறை அருகே, தம் பாக்கெட்டிலிருந்த கிளவுசை எடுத்துப் போட்டார். பின் சமையலறையில் நுழைந்து காத்திருந்தார்.

ஐந்தாவது நிமிடம் அவன் வந்தான். குனிந்து பார்த்துக் கொண்டே, எதையோ கூர்ந்து தேடிக் கொண்டே வந்தவனது பார்வையில் அந்த கிளவுஸ் பட, சட்டென்று குனிந்து அவன் அதை எடுக்க, பாய்ந்து வெளியே வந்தார் ஜோ.

''மிஸ்டர்! யு ஆர் அண்டர் அரெஸ்ட். உன் உள்ளங்கையைக் காண்பி!''

பிரமை பிடித்த நிலையில், தன்னை அறியாமல் அவன் கையை நீட்ட—

ஆணி குத்திக் கிழித்ததைப் போன்ற காயம் சிவந்து தெரிந்தது.

''இப்போ சொல்லு... உன் பொண்டாட்டியை ஏம்பா கொலை செஞ்சே?''

ஒரு கணம் அவரை வெறித்துப் பார்த்தான். மறு கணம் உடைந்து அழுதான்.

ஒரு நிதானத்துக்கு வந்ததும் அவன் பேசத் தொடங்கினான்.

ஷீலாவின் அழகுக்காகவே அவன் அவளைக் கலியாணம் செய்து கொண்டான். அவர்களுக்கிடையே இருந்த பொருளாதார இடைவெளி பற்றி அவன் கவலைப்படவில்லை.

ஒரு நாள் ஆழ்ந்த உறக்கத்தில் அவள், ''விசு...விசு...'' என்று முனகியபோதுதான் அவனுக்கு முதல் சந்தேகமே எழுந்தது.

நான்கு நாட்களுக்கு முன் அவளுக்கு வந்த ஒரு கடிதத்தை அவன் தற்செயலாகக் கண்டெடுத்துப் படித்த போது—

அவளைக் கையும் களவுமாப் பிடித்துவிட வேண்டும் என்கிற திட்டம் அவனுள் உருவெடுத்தது. அதன்படி வெளியூருக்குச்சென்றவன் ஒரு நாள் முன்பாகவே சென்னைக்குத் திரும்பினான். ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகாமையில் ஒரு ஹோட்டலில் அறை எடுத்துத் தங்கினான். இரவு பத்து மணிக்கு மேல் வீட்டுக்கு வந்து, தன்னிடமிருந்த இன்னொரு சாவியால் கதவைத் திறந்து மெல்லப் படியேறிப் போய்ப் படுக்கையறைக்கு வெளியில் பதுங்கியபோது உள்ளே அவள் பேசிக் கொண்டிருப்பது கேட்டது.

''விசு! இத்தனை சொத்தையும் இழந்துடறதுக்கு நான் தயார் இல்லே. அதே நேரத்திலே உங்களையும் என்னுலே விட முடியாது. அதனுலே....''

அதற்கு மேல் அவள் பேசியதைக் கேட்க அவன் அங்கே இல்லை.

''மறுபடி அவளுக்குத் தெரியாம வீட்டுக்குள்ளே நுழைஞ்சு நான் மாடிக்குப் போனப்போ...அவ சிட்டவுட்டிலே நின்னுக்கிட்டிருந்தா. பின்னுலேயே போயி....''

''பின்னுலேயே போயி....''

அவன் திரும்பவும் உடைந்து அழுதான்.

ஜோ அவனையே பார்த்தார்.

''எல்லாமே விதி சார். என் தலையெழுத்து! இல்லாட்டி இப்படி யெல்லாம் ஏன் நடக்கணும்? அவளைப் பிடிச்சுக் கீழே தள்ளி, அவ விழுந்து சாகறதைப் பார்த்து நான் செய்துட்ட காரியம் எத்தனை பயங்கரமானதுனு சட்னு உணர்ந்து, அதிர்ச்சி அடைஞ்சு, பிரமை பிடிச்சாப்பலே திரும்பி வந்து படி இறங்கறப்போ என்ன செய்யறோம்கற நினைவே இல்லாம, ஹோட்டலில் கையில் ஆணிகுத்தி ஏற்பட்ட ரத்தக் கசிவுக்காகப் போட்டிருந்த கிளவுசைக் கழற்றி, பாக்கெட்டுக்குள்ளே போடறதா நினைச்சுக் கீழே போட்டு, அது உங்க கையிலே கிடைக்க விதி சார்! எல்லாமே விதி...''





# சகலகலா வல்லவன்

"அண்ணே, 'சகல கலா வல்லவன்' படம் பாத்தியா அண்ணே?"

"பாத்தேன். கமலஹாசன் குடுமி வெச்சக்கினு பட்டிக்காட்டானு வந்து படா ஷோக்கா சண்டை புடிச்சிருக்காரு. அடேங்கப்பா! சேத்துலே ஒரு சண்டை. புல்லாங்குழல் மாதிரி ரெண்டு சிறு குச்சியை வெச்சிக்கினு சுழட்டிச் சுழட்டிச் சண்டை புடிக்கறுரு. புச்சா இருக்கு. அப்பறம் ரவீந்தர்கூட ஒரு சண்டை. மெய்சிலிர்த்திடுச்சு போ."

"கதையைச் சொன்னு சுவாரஸ்யம் போயிடும். சொல்லாதே. கமல் டான்ஸ் ஆடறுரா அதை மட்டும் சொல்லு."

"ஆடாமே இருப்பாரா? பாதிப் படத்துக்கு அப்புறம் ஒரு டான்ஸ் ஆடறுரு பாரு அடேங்கப்பா! எம்மாம் பெரிய செட்டு தெரியுமா? விளக்கு அணைஞ்சு அணைஞ்சு எரியுது. கமல் 'கும்' முனு ஆட்டம் போடறுரு. நானே விசில் அடிச்சிட்டேன்னு பாரேன்."

"படம் முழுக்கக் கமல் குடுமியோடத் தான் வர்றுரா?"

"இல்லே. இடைவேளைக்கு அப்புறம் குடுமியை எடுத்துட்டு இங்கிலீஷ் எல்லாம் பேசிக்கினு அமெரிக்கன் ரிடர்னு வர்றுர். அப்புறம் துபாய்க்காரனு வர்றுரு. அதெல்லாம் விட அம்பிகாவைக் கடத்திக்கிட்டுப் போற வேலை காரில் சேஸ் பண்ணிக்கினு போறுரு பாரு... படா த்ரில்லா இருக்கு."

"சரிதாண்ணே. மாட்டுக்காரப் பையன் அமெரிக்காக்காரன் வேஷம் வேணும்னு போடலாம். இங்கிலீஷ் எப்படிப் பேசுவான்? கார் ஓட்டறதுக்கு எப்போ கத்துக்கறுன்? ரீஸா இல்லே இருக்கு!"

"அத்தையெல்லாம் கண்டுக்காதே. படம் போற வேகத்திலே அத்தெ யாரு கேக்கப் போறுங்க?"

"அம்பிகா எப்படி நடிச்சிருக்கு?"

"கம்முனு கெட. இது ஹீரோ சப்ஜக்டு. அம்பிகா எம்புட்டு நடிக்கணுமோ அம்புட்டோட சரி."

"மகேந்திரன் காமெடியா?"

"ஆமா, பூனை மாதிரி கத்தி சிரிக்கவைக்கப் பாக்கறுரு. ஆனு ஜனங்க சிரிக்கிறதென்னவோ வி.கே. ராமசாமி பேச்சுக்குத்தான். பொண்டாட்டி செய்யறது புடிக்காம அவரு கமல் பக்கம் சைட் வாங்கச்சே சதுர்காய் உடைச்ச மாதிரி இருக்கு."

"துளசியைப் பத்தி....?"

"அமெரிக்கா பொண்ணு வரச்சே மட்டும் அழகா இருக்காங்க."

"சிலுக்கு சுமிதா?"

"குலுக்கு சுமிதான்னு நான் அவங்களுக்கு பேர் வெச்சிருக்கேன். கமலோட சேர்ந்து பாட்டுப் பாடி ஆடியிருக்காங்க. அப்புறம் காட்டுப் பங்களா தீப்பிடுச்சு எரியறப்போ கூட அவங்க நெருப்புக்கு நடுவே ஆடறதாக் காட்டியிருக்காங்க! சிரிப்பா வந்தது."

"தேங்காய் வந்து என்ன செய்யறுரு?"

"திடீர் அப்பாவா வர்றுரு. கமலுக்கும் அம்பிகாவுக்கும் கல்யாணம் முடிச்சு வைக்கிறுரு."

"பாட்டு எத்தனே?"

"ஆறு பாட்டு. நாலு தேறும்."

"காமிராமேன் பாபு எப்படி?"

"கார் சேஸ்... பங்களா தீப்பிடிக்கிற சீன்... இளமை இனிமை பாட்டு சீன் எல்லாத்திலேயும் பாபு வெளுத்து வாங்கியிருக்காரு."

"ஏ. வி. எம். கம்பெனிக்கும் டைரக்டர் எஸ். பி. முத்துராமனுக்கும் நல்ல ராசி உண்டு. இதையும் சேர்த்துடலாமா?"

"தாராளமா படத்தோட பேரிலே முதல் எழுத்தை அழிச்சுட்டுப் படிபாக்கலாம். அது தான் பட்டும்!"

"அடடே! 'கலகலா வல்லவன்!'"

-திரைஞானி

# சரணம் கணேசா! 5




ஒரு சமயம் சப்தரிஷிகள், சோணபத்ர கல்லில் கடவுளை ஆவாஹனம் செய்து பூஜை செய்து கொண்டிருந்தனர். விநாயகர் அக்கல்லை எடுத்து விழுங்கி விட்டார்.

கதை: ரா. கணபதி | படக்கதை அமைப்பு: வாண்டுமாமா | சித்திரம்: விநு

விரட்டி வந்த ரிஷிகளிடமிருந்து தப்ப விநாயகரே
சோணபத்ர கல்லாக மாறி விட்டார்.

முழுமுதற் கடவுளான
விநாயகர் ....

நம் முன் வந்தவரைக்
கல்லாகும்படி அபசாரம்
செய்து விட்டோமே!

கஜமுகாசுரனை
அழிப்பது யார்?

பார்வதி பரமேசுவரர்
களுக்கு என்ன பதில்
சொல்லுவது? ...

அப்போது சப்த ரிஷிகளுள் ஒருவரான வசிஷ்டரின் பத்தினி
அருந்ததி வருகிறார்.

கவலை வேண்டாம்.
சோணபத்ரக் கல்லாகி
யுள்ள விநாயகருக்குப்
பூஜை செய்யுங்கள்.

தொடரும்...



# தாமரை

ஜெயரதன்

''மே ஐ ஸ்பீக் டு மிஸஸ் தாமரை ப்ளீஸ்...''

டெலிபோனை எடுத்த தாமரை, ''நான் தான் சொல்லுங்கள்'' என்றாள்.

''ஒன்றும் விசேஷமாக இல்லை. உங்களுக்கு ஞாபகப்படுத்தத்தான் போன் செய்தேன். இன்னும் ஐந்து நாட்கள் இருக்கின்றன. உங்கள் பதிலுக்கு... ஐ மீன்.... சம்மதத்திற்கு...''

குரலில் உற்சாகம் துள்ளப் பேசினான் சந்திரன்.

பதில் சொல்லாமல் மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்தாள் தாமரை.

''அப்புறம் இன்னொன்று கேட்கணும் உங்களிடம்... இன்னிக்குக் காலைலே பதினொரு மணிக்கு உங்களைக் காண்டீன்லே பார்த்தேன். முகத்தில் ஏதோ வேதனை தெரிஞ்சுதே? என்ன ஆச்சு? — ஏன் இப்படி 'டல்'லாக இருந்தீங்க?''

பரிவும் கவலையும் நிஜமாய்த் தெரியப் பேசினான் சந்திரன்.

சட்டென்று குழைந்து போனாள் தாமரை.

இப்படி மனத்தைத் தொடுகிற மாதிரி பேசுகிறபோது நெகிழ்ந்துதான் போய்விடுவாள் தாமரை. மனத்துக்குள் இருக்கிற ஒரு பார்வையிலேயே கணித்துவிடுகிற சந்திரனின் சாதுரியத்தைக் கண்டு பலமுறை வியந்திருக்கிறாள். அவள் மீது அவன் காட்டுகிற அன்பையும், பரிவையும் கண்டு மனத்துக்குள் நவித்துப் போயிருக்கிறாள்.

அன்று காலை எழுந்தது முதலே ரவியின் நினைவு அவளுக்கு. அலை அலையாய் யாரோ ஏவிவிட்டது மாதிரி மனத்தை அலைக்கழித்தது. காலையில் சாப்பிட உட்காரும்போது கூட உருளைக் கிழங்கு பொரியலைப் பார்த்ததும் ரவியின் நினைவு மீண்டும் குபீரிட்டது.

உருளைக் கிழங்கைத் தோல் உரிப்பது என்றால் அவனுக்குப் பிடிக்கும்.

''தாமரை! எனக்கு உருளைக் கிழங்குக்குத் தோல் உரிக்க ஏன் பிடிக்கிறது தெரியுமோ?''

ஓரக்கண்ணால் பார்த்துக் கொண்டே வேலையைப் பார்ப்பாள் தாமரை.

''தோலுரித்த உருளைக் கிழங்கின் நிறம் எனக்குப் பிடிக்கிறது. அது உன் இடுப்பின் மார்பின், கழுத்தின் நிறத்தை எனக்கு ஞாபகப்படுத்துகிறது...''

பேசிக் கொண்டே பின்புறமாக வந்து அழுந்த ஆலிங்கனம் செய்து, கழுத்து, இடுப்பு என்று எல்லா இடங்களிலும் உதடுகளைப் பதித்து...

அன்று ஆபீஸுக்கு லேட்!

ஓ! என்மீது எத்தனை ஆசை வைத்திருந்தீர்கள் ரவி!... எப்படி என்னை விட்டு



உங்களால் போக முடிந்தது? சில மணி நேரங்கள் என்னைத் தனியாய் விடவே மனம் வராத நீங்கள், நிரந்தரமாய் என்னை விட்டு எப்படிப் போனீர்கள் ரவி?

கேவலாய் வந்த துயரத்தை அடக்கிக் கொண்டாள்.

''என்ன பதிலைக் காணோம்? என்மீது ஏதாவது வருத்தமா?''

மீண்டும் ஆர்வம் கொப்பளிக்கக் கேட்டான் சந்திரன்.

''இல்லே...அதெல்லாம்ஒண்ணுமில்லே.''

''காலேலேருந்து ஒரே தலைவலி. அதான். போனை வச்சுடட்டுமா?....'' என்று அவசரம் அவசரமாய் வைத்தாள் தாமரை. இன்னும் சற்று நேரம் பேசினாலும் எங்கே

தன் மனத்தை உடைத்துப் பார்த்துவிடுவானோ என்று பயம்.

சந்திரன் அவளோடு வேலை பார்க்கிற இளைஞன். பெயருக்கேற்ற மாதிரி பூரண சந்திரனைச் சிரிக்கும் முகம். முதன் முதலில் போன வருஷம் வேலைக்கு வந்தபோது சந்திரன் நாற்காலிக்கு அடுத்த நாற்காலிதான் அவளது நாற்காலி. அலுவலகம் அதன் இயக்கம், அவசரம், நுணுக்கம் ஆகியவற்றையெல்லாம் பார்த்து அவள் பிரமித்துப் போனபோது, திகைத்து மருண்டுபோனபோது எவ்வளவு உதவி புரிந்திருக்கிறான் இந்தச் சந்திரன்!

வேலைக்குப் புதிதாகையால் ஒன்றுமே புரியாமல் அவள் தவித்தபோது எவ்வளவு விஷயங்களைப் பொறுமையுடன் சொல்லிக் கொடுத்திருக்கிறான் அவன்!

எப்படியோ ஒரு நல்லெண்ணம் அவன் மீது விழுந்து போயிற்று. நாளாக நாளாக அந்த நல்லெண்ணம் ஆழமாய் வேரூன்றி வளரலாயிற்று. அவளே அறியாமல் ஒரு நெருக்கத்தைத் தரலாயிற்று. அவள் மனத்துக்குள் அவன் எப்படிப் புகுந்து கொண்டான் என்று அவளால் இனம் பிரித்துக் கண்டு பிடிக்க முடியவில்லை.

வயதான அப்பாவோடு அவள் வாழ்க்கையைத் தனியாகத் துவங்க ஆரம்பித்தபோது, தனியாகவே வாழ்ந்து விடுவது என்ற வைராக்கியத்துடன்தான் ஆரம்பித்தாள். அப்பாவின் ஆஸ்த்மா நோய் நாளாக நாளாக வளர்ந்து அவரைத் தளர்த்தியிருந்தது. பெயருக்கு ஒரு துணை என்று இருந்தாரே தவிர, உண்மையில் அவருக்கு அவள் தான் துணையாக இருந்தாள். வேலை கிடைத்து வருமானம் வந்தாலும், தனியாய் ஒரு பெண் வாழ்க்கை நடத்துவது அவ்வளவு எளிதாய் இருக்காது என்று உணர அதிக நாள் பிடிக்கவில்லை அவளுக்கு. வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் பிரச்னைகள் எழுகிறதைக் கண்டபோது தனியாய்ச் சமாளிப்பது பெரும் சவாலாகவே இருந்தது. பல சமயங்களில் சோர்ந்து போவாள்.

இப்படி என்னைத் தனியாய்த் தவிக்க விட்டு விட்டு ஏன் போனீர்கள் ரவி? அப்படி என்ன பாவத்தை நான் செய்தேன் ரவி?

மனம் உடைந்து பல நாட்கள் குமுறியிருக்கிறாள். 'இன்னும் அரை மணியில் வந்துவிடுகிறேன் இரு' என்று சொல்லிப் போனவன், ஸ்கூட்டர் விபத்தில் சிக்கி, சடலமாய்த் திரும்பி வந்தான்.

ஐந்து வருடத் திருமண வாழ்க்கை.

இருபது வயதில் திருமணம். இருபத்தைந்தில் வைதவ்யம்.

ஐந்து வருடங்களில் போய்விடுவோமோ என்றுதான் என்னை அவ்வளவு சொந்தம் கொண்டாடினீர்களோ? என் ரசனையைக் கூட உங்கள் கண்ணாலேயே ரசிக்க வேண்டும் என்று எதிர்பார்த்தீர்களோ?

என்ன புடவை வாங்க வேண்டும் என்பதை அவனே தீர்மானிப்பான். என்றைக்கு எதை எதை அணிந்துகொள்ள வேண்டும் என்பதையும் அவனே சொல்வான்.

''இந்த அரக்குக்கரை வெண் பட்டில் நீ எப்படி ஜொலிக்கிறாய் தெரியுமோ? கையில் வீணையைக் கொடுத்து நதிக் கரையில் உட்கார வைத்தால் அசல் ரவி வர்மா வரைந்த சரஸ்வதிதான்.... பூஜை செய்ய அவனவன் வந்துவிடுவான்....''

இவ்வளவு ஆசையா உங்களுக்கு?

அவன் மார்பில் மாலையாய்ச் சரிந்து விழுவாள் தாமரை.

''நீ சிரிக்கிறபோது கன்னத்துலே விழற குழி எவ்வளவு அழகாய் இருக்கு தெரியுமோ?

''நேத்து பாத்ரூம்லே மோகனத்தை 'ஹம்' பண்ணினியே, அப்படியே சொக்கிப் போயிட்டேன்... கண்ணம்மா... இப்பப் பண்ணேன்... கேட்கணும் போலிருக்கு...''

ரசனை, ரசனை, ரசனை. அணு அணுவாய் அவளை ரசித்து அனுபவித்து, ஐந்தாண்டுகளில் ஐம்பது வருஷ சுகத்தை அனுபவித்துவிட்டுப் போய்ச் சேர்ந்தான் ரவி.

ரவி விட்டுச் சென்ற வெறுமையிலிருந்து மீளவே வெகு நாட்கள் ஆயின தாமரைக்கு. ரவி வேலை பார்த்த அலுவலகத்திலேயே அனுதாபத்தின் பேரில் அவளுக்கு வேலை போட்டுக் கொடுத்தார்கள்.

அப்போது அறிமுகமானவன்தான் சந்திரன்.

அவனுடைய நேர்மையான பார்வைகளும், கனிவும், பரிவும் அவளைக் கலக்கி விட்டன. அவள் மனத்துக்குள் இருக்கிற எண்ணங்களைத் தானே உணர்ந்தது மாதிரி அவன் சொல்கிறபோது நெகிழ்ந்துபோவாள் தாமரை.

''உங்களுக்கு இப்படி ஒரு துயரம் நேர்ந்ததைப் பார்க்கிறபோது, எனக்குத் தெய்வ நம்பிக்கையே விட்டுப் போறது. ஏன் உங்களுக்கு இப்படி ஒரு தனிமை? இன்னும் எத்தனை வருஷங்கள் நீங்கள் தனிமையில் தவிக்கப் போகிறீர்கள் தாமரை...''

''அது என் தலைவிதி... வேறே வழியில்லே!''

கீழுதட்டை மடித்துக் கொண்டு குரல் உடையச் சொன்னாள்.

''நடிகை 'நடனஸ்ரீ' பேராசை பிடித்தவள்னு சொல்றியே, பார்த்தால் அப்படித் தெரியலையே?''

''ஒவ்வொரு படத்திலே நடிக்கும்போதும் புதுப் புதுப் பேராசைவைச்சுக்கிறாளே... அந்த ஆசையைச் சொன்னேன்!''

—சுதாகரன்





Smt. RENGAMONY

In fond and affectionate memory of

**Smt. RENGAMONY**

**Born : 25-3-1925**

**Died : 29-8-1972**

Beloved wife of S. Padmanabhan Affectionate mother of Jana and Kanna, mother-in-law of J. Gopalan & Malathy, Grandmother of Sandhya & Srinivas

# டூ-இன்-ஒன்



போர்ஹென்ஸ்
டபிள்—ஆக்ஷன்
டூத்ப்ரஷ் உங்கள்
பற்களை சுத்தம்
செய்யும்போதே
ஈறுகளையும்
தேய்த்துக்
கொடுக்கிறது.

பற்களை சுத்தம்
செய்யும்
உறுதியான
நீலக் குச்சங்கள்

ஈறுகளைத்
தேய்த்துக்
கொடுக்கும்
மென்மையான
வெள்ளைக்
குச்சங்கள்

**போர்ஹென்ஸ்**

டூ-இன்-ஒன்
டூத்ப்ரஷ்

அடல்ட்
மற்றும் ஜூனியர்

276 F-203 TAM

''இது விதியில்லே... சதி... ஆண்கள் பெண்களை அடிமைப்படுத்த ஏற்படுத்திய சதி. இன்னொரு திருமணம் நீங்கள் ஏன் செய்துகொள்ளக் கூடாது?... உங்கள் இளமையும் அழகும் இப்படிக் காட்டு நிலாவாய் வீணாக வேண்டுமா?...''

திடமாய், தீவிரமாய் அவன் சொன்னதும், சர்ப்பமாய்த் தலைநிமிர்ந்தாள் தாமரை.

''என்ன உளர்ரீங்க சந்திரன்?''

''இது உளரல் இல்லே.... சத்தியப் பிரமாணம்.... இப்படி உங்க வாழ்க்கையை வீண் பண்ணிக்கக் கூடாது. அது படைப்புக்கே செய்யிற துரோகம்... தனியாகவே மீதி வாழ்க்கையை வாழ்ந்து நீங்க வீணாகப் போகிறதை என்னாலே சகிச்சுக்க முடியல்லே. மனம் விட்டுச் சொல்றேன். உங்களுக்கு மறுமணம் செஞ்சுக்க ஆட்சேபனை இல்லேன்னா, நான் உங்களை மணந்துகொள்ளத் தயார்... ஒரு நாள் என் மனசைத் திறந்து சொல்லணும்னு நெனைச்சேன். இன்னிக்கு வாய்ப்புக் கிடைச்சது. சொல்லிட்டேன்....''

சந்திரன் பேசப் பேசப் பனிப் பொம்மையாய் உறைந்து போனாள் தாமரை.

இப்படிப் பல நாட்கள்.

அன்றாடம் விதவிதமாய் வாதங்கள்.

''இன்னிலேந்து பத்தாவது நாள்லே நீங்க எனக்குப் பதில் சொல்றீங்க... ஓ.கே?''

நாளைக்குப் பதில்கேட்டு வந்து நிற்பான் சந்திரன்.

''நீங்க வாயாலே பதில் சொல்றவரைக்கும்கூட என்னால் பொறுத்துக்க முடியாது. தாமரைப்பூக் கலர்ப் பட்டுப் புடவையைக் கட்டிக் கொண்டு ஆபீசுக்கு வரவேண்டும் நீங்கள்.... அதைப் பார்த்ததுமே உங்கள் சம்மதத்தை நான் புரிந்து கொள்வேன்.''

முதல் நாள் சந்திரன் சொன்னது நினைவுக்கு வந்தது.

தூக்கம் வராமல் படுக்கையில் புரண்டு படுத்தாள்.

சந்திரனுக்கு என்ன பதில் சொல்வது?

அவள்மீது அடங்காத காதலும், பரிவும் கொண்டிருக்கிறான். இப்படி ஒரு கணவன் கிடைக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டாமோ? அவளுக்கு நிழலாய், கவசமாய்த் துணையிருப்பான். சந்தேகமில்லை. தனிமை அச்சுறுத்தும் வாழ்க்கையில் ஒரு சந்தோஷத் துணையாய் இருப்பான் சந்திரன்.

மின்னலாய் ரவியின் நினைவு வந்தது.

ஒரு நாள் இப்படித்தான், முகம் ஒரு மாதிரி இருக்க உட்கார்ந்திருந்தான் ரவி.

''ஏன் எப்படியோ இருக்கீங்க?''

பதறிப்போய்க் கேட்டாள் தாமரை.

அவளை மார்பில் சரித்துக் கொண்டான் ரவி.

''இன்னிக்குக் காலையிலே உங்க மாமா பிள்ளை வந்திருந்தான் இல்லையா? அமெரிக்காவுக்குப் போறான் இல்லையா? அவன் கூட நீ சிரிச்சுப் பேசிண்டிருந்தே இல்லியா? அதை என்னாலே தாங்க முடியல்லே தாமரை தாங்க முடியல்லே....''

பாம்பை மிதித்தவள் மாதிரிப் பதறிப் போனாள் தாமரை.



அவன்: ''அந்துலே கலரில் பேண்ட் துணி இருக்கா?''
சிப்பந்தி: ''சிமிண்டு கலரில்தானே இருக்கு! எத்தனை மீட்டர் வேணும்?''

—உ. ராஜாஜி

''என்ன சொல்றீங்க?''

''ஒண்ணும் தப்பா நினைச்சுக்காதே... நீ வேற ஆண்களோட சிரிச்சுப் பேசினாலே என்னாலே தாங்க முடியல்லே தாமரை. ஏனோ தெரியல்லே. மனசு துடிக்கிறது. தவிக்கிறது. வாழ்க்கைன்னு வந்தா மத்தவங்களோட பேசாம முடியுமா? ஆனா உன்னோட யார் சிரிச்சுப் பேசினாலும் என் மனசிலே ஒரு பொறாமை அக்கினியாக் கொழுந்து விட்டு எரியறது. நான் இப்படிப் பொஸஸிவ்வா இருக்கக் கூடாதுன்னு உணர்றேன். இது நடக்கற காரியமில்லேன்னு புரியறது. ஆனா தாங்க முடியல்லியே தாமரை... என்னாலே தாங்க முடியல்லே....''

குழந்தை மாதிரி அவள் மார்பில் முகத்தைப் புரட்டிப் புரட்டி விம்மினான் ரவி.

ரவியைத் தழுவித் தழுவிச் சுகித்துப் போனது நினைவுக்கு வந்தது தாமரைக்கு.

பாதித் தூக்கத்தில் வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்து உட்கார்ந்தாள் தாமரை. உடலெல்லாம் வியர்த்து விட்டிருந்தது. விளக்கைப் போட்டாள். கட்டிலுக்கு மேலே மாட்டியிருந்த புகைப்படத்திலிருந்து கண் காணித்துக் கொண்டிருக்கிற மாதிரி அவளையே பார்த்தான் ரவி.

மீண்டும் தூங்கிப் போனாள் தாமரை.

மறுநாள் காலை.

அவளைப் பார்த்ததும் துடித்துப்போனான் சந்திரன். வார்த்தைகள் வெளி வராது திணறித் தவித்தான்.

வெள்ளை வெளேர் என்று புடவையும் ரவிக்கையுமாய், நெற்றியில் திலகமின்றி... 'தாமரை... இது என்ன....'' என்று... பேசத் தொடங்கினவனை விழிகளாலேயே அடக்கினாள்.

'வெறும் தாமரை இல்லே... வெள்ளைத் தாமரை....நிறத்தைப் பாருங்கள். வெள்ளை தூய வெள்ளை... இது சூரியனை — ரவியைப் பார்த்து மலர்ந்த தாமரை... சந்திரனுக்கு மலராத தாமரை....''

மிருதுவாய்ச் சொல்லிவிட்டுத் தன் நாற்காலியை நோக்கி நடந்தாள். நடையில் தீர்மானம் தெரிந்தது.

# ROUTINE

## சுதாராணி ரகுபதி

''அவசரம் அவசரமாகப் பிள்ளைகளைப் பள்ளிக்கும் கணவரை ஆபீசுக்கும் அனுப்பியான பிறகு தியானத்தில் மூழ்குவேன். மனத்தை ஒருமைப்படுத்த தியானம் வெகுவாக உதவுகிறது. பிற்பகல் மூன்று மணிக்கு நடன வகுப்புத் துவங்குகிறது. அதற்கு முன்பாகக் கடிதங்கள், விமரிசனங்கள், ஆய்வுக் கட்டுரைகள் போன்றவை எழுதுவேன். இரவு படுக்கப் போகுமுன் சில சுலோகங்களைச் சொல்லிவிட்டுத்தான் படுப்பேன். இந்தச் சுலோகங்கள் சின்னச் சின்ன கவலைகளிலிருந்தும் மனத்தை விடுவித்து, பாஸிடிவ்வான எண்ணங்களை வலியுறுத்துகிறது.''

## டாக்டர் பி. ராமமூர்த்தி

காலையில் 5-30 மணிக்கு எழுந்து உடற்பயிற்சி செய்துவிட்டு 6.30 மணிக்கு காயத்ரி ஜபம் முடித்துவிடுகிறார். ஏழரை மணிக்கெல்லாம் நோயாளிகளைப் பார்க்கத் தயாராகி விடுகிறார். நடு நடுவே இடைவெளி கிடைக்கும்போதெல்லாம் ஸ்டெனோவுக்கு டிக்டேஷன் தருகிறார். பிற்பகல் வி.எச்.எஸ். அல்லது வேறு சில நர்ஸிங் ஹோமில் ரணசிகிச்சை. மறுபடி மாலை நோயாளிகளைப் பார்வையிடுதல். இரவு ஒரு மணி நேரம் புத்தகங்கள் படிப்பதற்காக ஒதுக்குகிறார். குறிப்பாக விஞ்ஞானம், கம்ப்யூட்டர் பிரிவு சம்பந்தமான புத்தகங்கள்.

## பி. மருதைப் பிள்ளை

கேஜ் மென்ட்ஸ்' விட்டுப் போகாமலிருக்க ஒரு 'பேட்' வைத்திருக்கிறார். இரவில் டி.வி. நியூஸ் கேட்கிறார்.

## மேஜர் ஜெனரல் எஸ். பி. மகாதேவன்

(தலைவர்: தமிழ்நாடு பப்ளிக் சர்விஸ் கமிஷன்)

''காலையில் ஐந்து மணிக்கு எழுந்தவுடன், படுக்கையில் அமர்ந்தபடியே 'ஓம்கார' ஜபம். ஐந்து தமிழ் தினசரிகளும் இரண்டு ஆங்கில தினசரிகளும் படித்துவிட்டால் அப்புறம் குளியல். பிறகு பூசை. (பூசையின்போது சங்கட நாசன கணேச தோத்திரம் – சம்ஸ்கிருதத்தில், ஆதித்யஹிருதயம், சனி தோத்திரம், பகவத்கீதையில் பதினைந்தாவது அத்தியாயம் சத்ய சாயி பாபாவிருந்து அன்றைய நினைச் சிந்தனை). உணவிற்குப் பிறகு அலுவலகம் செல்லக் காரில் அமர்ந்தால் நாற்பது நிமிட 'டிரைவ்'வில், பையில் வைத்திருக்கும் ஜபமாலையைக் கையில் எடுத்து விடுவேன். ஜபம் தான்! அலுவலகத்தில் எந்த வேலையும் துவங்கும் முன் அன்றைக்கு என்னென்ன செய்ய வேண்டும் என்று ஒரு பட்டியல் தயாரித்துக் கொண்டு விடுவேன். இசையில் அசாத்திய ஆர்வம். பக்தி இசை காலையில் என்றால், லேட்டஸ்ட் பாபுலர் மியூசிக் மாலையில்! இந்தி – ஆங்கிலம் – தமிழ் என்று எல்லா மொழிப் பாடல்களையும் ரசித்துக் கேட்பேன். இரவில் ஒரு மணி நேரம் புத்தகங்கள் படிப்பேன். க்ளாஸிக்ஸ் உட்பட.''

## திரு. P. B. ஸ்ரீநிவாசன்

இந்தியன் ஓவர்ஸீஸ் வங்கி நிர்வாக இயக்குநர்

தயிர்தான் பிற்பகல் உணவு. உடனே வெளியே கிளம்புகிறார். மாலை பொதுக் கூட்டங்கள்; இல்லையென்றால் ஆவடி, அம்பத்தூர் ஆகிய இடங்களில் ஊழியர்களுக்கான வகுப்புக்கள். (பாடங்கள்: அரசியல் விஞ்ஞானம், பொருளாதாரம், தொழிலாளர் நலச் சட்டங்கள்) இரவுபத்தரை மணிக்கு வீடு திரும்பி வேகவைத்த காய்கறி மட்டும் உண்டு, கட்சிப் பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழுதுகிறார். பன்னிரண்டு மணி வரை புத்தகங்கள் படிக்கிறார். சயன்ஸ், சரித்திரம், பொருளாதாரம், அரசியல் – ஆங்கிலத்தில், பிரம்மசூத்திரம், பகவத்கீதை காளிதாசனின் காவியங்கள் – சம்ஸ்கிருதத்தில். (அருமையான லைப்ரரி வைத்திருக்கிறார், கேட்பானேன்?)

தொகுப்பு: சாருகேசி; தமயந்தி



✖ திருமதி சுதாராணி



✖ டாக்டர் பி. ராமமூர்த்தி








வாயில் வையுங்கள். அப்புறம் நோவோகேய்ன் இஞ்செக்ஷன் கொடுக்கலாம். இது வலியைக் குறைக்கும்.

ஆண்டி-ஹிஸ்டாமின் மாத்திரைகளும் கொடுக்கலாம். ஆனால் குழந்தைகளுக்கோ அல்லது பெரியவர்களுக்கோ இரண்டாவது முறையாகத் தேன் கொட்டினால்—

மூச்சு நின்றிருந்தால், வாயோடு வாய் பொருத்திச் செயற்கைச் சுவாசமூட்டுங்கள். அதிர்ச்சியுற்றிருந்தால் அதிர்ச்சிக்குண்டான சிகிச்சையைச் செய்யுங்கள். மிகச் சிறிய குழந்தையாக இருந்தால் தாமதியாமல் டாக்டரிடம் எடுத்துப் போங்கள்.

பொதுவாக—

44. தாய்ப் பால் கொடுக்கும் தாய்மார்கள் கருத்தடை மாத்திரைகள் உண்ணக் கூடாது.

45. கிட்டத்து உறவினர்களை மணந்து கொள்ளாதீர்கள். பிறக்கும் குழந்தை மன வளர்ச்சி குன்றியதாய் அமைய வாய்ப்பு உண்டு.

46. பிரசவ காலத்தில் ஊட்டச் சத்துநிறைய உண்ணுங்கள். மருந்துகளைக் கூடியவரை தவிர்த்து வாருங்கள்.

47. முப்பத்தைந்து வயதுக்கு மேல்—பெண்களைப் பொறுத்த வரை — குழந்தை பெறுவதாயிருந்தால் யோசியுங்கள்!

தொகுப்பு: சாருகேசி



இங்கே மடிக்கவும்

# டாக்டர் இல்லாத வேளையில்...

கல்கி 29-8-'82 இதழுடன் இலவச இணைப்பு

## நன்றி

புதுதில்லி, வாலண்டரிஹெல்த் அசோஸியேஷன் ஆஃப் இந்தியா சார்பில், டாக்டர் டேவிட் வெர்னர் அவர்களும், டாக்டர் சி. சத்யமாலா அவர்களும் எழுதித் தயாரித்த மிக விரிவான நூலிலிருந்து சில முக்கியமான பகுதிகள் இங்கே தரப்பட்டிருக்கின்றன.

இவற்றைத் தேர்ந்தெடுப்பதில் உதவிய டாக்டர் என். எஸ். வியாஸ், எம்.டி. அவர்களுக்கும், குழந்தை வைத்திய மருத்துவரான அவரது துணைவியார் டாக்டர் ஜெயந்தி வியாஸ் அவர்களுக்கும் நன்றி.

## குறிப்பு:

இதில் நோய்களைப் பற்றியும், வீட்டு வைத்தியம், நோய்த் தடுப்பு, சுகாதாரம் பற்றிய அவசியமான குறிப்புக்களும் மட்டுமே தரப்பட்டிருக்கின்றன. நோய் முற்றிய நிலையில் அல்லது ஆபத்தான சமயங்களில் டாக்டரை அணுகுவதே நல்லது.

## வீட்டு வைத்தியம்: சில எச்சரிக்கைகள்:

அபாயம் எதும் இல்லாதவை என்று உங்களுக்குத் தெரிந்தால் மட்டும், எதற்கு — எப்படி உபயோகிக்க வேண்டும்என்று நீங்கள் அறிந்தால் மட்டும் வீட்டு வைத்தியம் செய்யுங்கள்.

தகுந்த நபர் ஆலோசனை தருகிற பட்சம், வெகு ஆபத்தான நிலையில் உள்ள நோயாளிக்கு, நவீன மருந்துகள் உபயோகிப்பதே நல்லது.

விஷக்கடிகளுக்கு வீட்டு வைத்தியத்தை மட்டுமே நம்பிக்கொண்டிராதீர்கள்! ஆரம்ப நிலையில் வீட்டு வைத்தியம் சில நோய்களைத்தான் குணமாக்கும். முற்றிய நோய்களை விரட்ட நவீன மருந்துகளை உபயோகியுங்கள்.

### வைத்திய முறைகள்

1. குழந்தைகளுக்கு இருமலும் சளியும் இருந்தால்:

துளசி இலையைப் பிழிந்து அதன் சாற்றை ஒன்றிரண்டு சொட்டு ஒரு நாளைக்கு மூன்று வேளை கொடுக்கலாம்.



40. காலில் அடிபட்ட காயத்திலிருந்து ரத்தம் போய்க் கொண்டே இருந்தால் நிறுத்த:

அடிபட்ட பகுதியை உயர்த்திப் பிடித்துக்கொள்ளுங்கள். சுத்தமான ஒரு துண்டுத் துணியை (துணி இல்லையென்றால் உங்கள் கையாலேயே) அடிபட்ட இடத்தில் நேரடியாக அழுத்துங்கள். ரத்தப் போக்கு நிற்கிறவரை — கிட்டத்தட்ட 15 நிமிடங்கள் வரை ஆகலாம் — அழுத்திப் பிடியுங்கள். அப்படியும் நிற்காத பட்சத்தில், அடிபட்ட பகுதியைக் கூடுமானவரை உயர்த்திப் பிடித்துக் கொள்ளுங்கள். அடிபட்ட இடத்தை ஒட்டி ஒரு துணியை மடித்து இறுக்கமாகக் கட்டுங்கள். கையோ, காலோ நீலமாகிவிடுகிற அளவுக்கு இறுக்கக் கூடாது. துணி இல்லை யென்றால் கயிற்றை உபயோகிக்கக் கூடாது.

41. இன்ஃபெக்ஷன் உள்ள — அசுத்தமான காயமானால் எப்படித் தெரிந்து கொள்வீர்கள்?

காயம் சிவந்து இருக்கும். வீங்கிப்போய், பழுத்து இருப்பதுடன், வலியும் இருக்கும். சீழ் இருக்கும். நாற்றம் அடிக்க ஆரம்பிக்கும்.

42. இந்த இன்ஃபெக்ஷன் உடலின் பிற பகுதிகளுக்குப் பரவுமானால் அதன் அறிகுறிகள்:

காய்ச்சல் வரும்; காயத்தைச் சுற்றி சிவப்பு வரி விழும். காதின் அடியில், கழுத்தில் தாடையின் அடியில், அக்குளில், அடிவயிற்றில் — வீக்கம் தெரியும்.

43. விஷத் தேள் கடிக்கு:

ஐந்து வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்குத்தேள் கொட்டினால் அபாயகரமானது. அதிலும் குழந்தையின் தலையிலோ, உடம்பிலோ கடிபட்டால் மிகவும் ஆபத்தானது.

பெரியவர்களுக்குத் தேள் கொட்டினால் முதல் தடவையாக இருந்தால் அத்தனை ஆபத்தில்லை. ஆனால் இரண்டாவது முறை கொட்டி, உடனடியாகச் சிகிச்சை செய்யவில்லை என்றால் நிலைமை ஆபத்தானது.

பெரியவர்களுக்கு முதல் தடவை கடிபட்டால், ஆஸ்பிரின் மாத்திரை கொடுங்கள். பிறகு ஐஸ் கட்டியைக் கடி

கடுமையான நோய், உடல் வறட்சி, அலர்ஜி — இவை காரணமாக அதிர்ச்சி உண்டாகிறது.

38. அதிர்ச்சியுற்ற நபரை, கால் பகுதி அதிக உயரத்திலும் தலைப் பகுதி தாழ்ந்த நிலையிலும் படுக்க வையுங்கள். தலையில் ரத்தக் காயம் பட்டிருந்தால் காலை உயர்த்திப் படுக்க வைக்கக் கூடாது. பின்னால் ஒரு தலையணையை அண்டைக் கொடுத்து, சாய்ந்து உட்காரும் நிலையில் அமர வைத்தால்தான் நல்லது. குளிருகிறது என்றால் போர்த்து விடுங்கள். சுய நினைவு இருந்தால், சூடான நீரோ, சுமாரான சூடு உள்ள நீரோ குடிக்கக் கொடுங்கள். அதிர்ச்சி, ஆக்ஸிடெண்ட், குத்து-வெட்டுக் காயத்தின் காரணமாக இருந்தால் எதுவும் குடிக்கக் கொடுக்காதீர்கள். அவருக்கு அறுவைச் சிகிச்சை தேவைப்படலாம். அதற்குத் தேவையான ஏற்பாடுகளை உடனே செய்ய முயலுங்கள். அதிக வலியால் துடித்தால் ஆஸ்பிரின் அல்லது வலி நிவாரண மாத்திரை ஏதாவது கொடுங்கள். அமைதியா யிருக்கச் செய்யுங்கள்.

39. ஒருநபர் மயங்கி விழுந்தால் முதலில் நீங்கள் கவனிக்க வேண்டியவை:

சரியாக மூச்சு விடுகிறாரா? இல்லையென்றால் தலையைச் சற்றே பின்னுக்குத் தள்ளி, தாடையையும் நாக்கையும் முன்னுக்கு இழுங்கள். தொண்டையில் ஏதேனும் அடைபட்டுக் கொண்டிருந்தால் அதை எடுத்து விடுங்கள். மூச்சின்றி மயங்கி யிருந்தால் அவர் வாயோடு வாயை வைத்து மூச்சு விடச் செய்யுங்கள்.

அதிக ரத்தச் சேதம் ஆகியிருந்தால், ரத்தப் போக்கை நிறுத்தப் பாருங்கள்.

அதிக வெயில் சூட்டினால் (ஹீட் ஸ்ட்ரோக்) மயங்கியிருந்தால், நிழலான இடத்தில், தலையை உயர்த்திப் படுக்க வைத்துவிட்டு, குளிர்ந்த நீரால் உடம்பை நனைத்துத் துடைக்கவும். அதிக அடிபட்டதனால் நிலைவிழுந்த நிலையில் உள்ளவரை வெகு ஜாக்கிரதையாக நகர்த்த வேண்டும். கழுத்திலோ, முதுகிலோ அடி பலமாக இருந்து எலும்பு முறிவு இருந்தால் இடமாற்றத்தின்போது நிலைமை மோசமாகிவிடலாம்.





எண்ணெயைச் சூடாக்கி, ஒரு டேபிள் ஸ்பூனில் எடுத்துக்கொண்டு கற்பூரத்தைஉடைத்து, அதில்போட்டு, காற்றுப் புகாத பாட்டிலில் வைத்துக் கொள்ளுங்கள். கழுத்திலும் மார்பிலும் இதைத் தேய்த்தால் சளி பிடித்த குழந்தைக்கு இதமாயிருக்கும்.

2. பெரியவர்களுக்கானால்:

யூகலிப்டஸ் இலைகளை ஒரு கைப்பிடி அளவு போட்டு, இரண்டு தம்ளர் தண்ணீர் விட்டுக் காய்ச்சுங்கள். பிறகு வடிகட்டி, சர்க்கரை சேர்த்து ஒரு நாளைக்கு மூன்று வேளை குடிக்கவும். தும்பைச் செடியின் இலைகளை நீரில் வேகவைத்து மஞ்சள் பொடியை அதனுடன் கலந்து விடுங்கள். அந்த நீரின் ஆவியைச் சுவாசித்தால் அடைப்பு நீங்கும்.

3. மூக்கடைப்பு நீங்க:

ஒரு துண்டு மஞ்சளை விளக்கெண்ணெயில் நன்றாக நனைய வைத்துவிட்டு அதை அடுப்பிலிட்டுப் பொசுக்குங்கள். பிறகு அதன் புகையைச் சுவாசியுங்கள். சிறுமிளகு இருந்தால் அதை எரித்து, அதன் புகையையும் சுவாசிக்கலாம். கூம்பு மாதிரி பேப்பரைச் சுருட்டிக் கொண்டு கூர்த்த பகுதியில் எரித்த மிளகை வைத்துவிட்டுப் பரந்த பகுதியோடு உங்கள் முகத்தை வைத்துக் கொண்டு, மிளகின் புகையைச் சுவாசிக்கலாம்.

4. கரகரப்பான, அடைத்த தொண்டைக்கு:

ஒரு கோப்பையில் ஒரே அளவு தேனையும் எலுமிச்சம் பழச் சாறையும் கலந்து, பத்து நிமிடங்களுக்கு ஒரு முறை

ஒரு டேபிள் ஸ்பூன் அளவு குடித்தால் தொண்டைக்கு இதமாயிருக்கும்.

நீரைச் சூடாக்கி, எலுமிச்சம்பழச் சாற்றைக் கலந்து, சர்க்கரை அல்லது உப்புச் சேர்த்துக் கலக்கி, சூடாகக் குடிக்கவும்.

5. குடலில் குறண்டல் வலி (Cramp) வயிற்று வலி, பித்த நீர்ப்பை (Gall Bladder) வலி வந்தால்:

ஏஞ்ஜெல்ஸ் டிரம்பெட் இலைகள் இரண்டை நூறு மில்லி விட்டர் நீரில் நன்ருக ஊறவைத்து, பெரியவர்களுக்கு இந்த நீரைப் பத்திலிருந்து பதினைந்து சொட்டுக்கள் கொடுக்கலாம். ( செடி விஷமுள்ளது. குறிப்பிட்ட அளவுக்கு மேல் இதை உபயோகிக்கக் கூடாது.)

6. புண்கள், அல்சர் புண்கள், தொழுநோய்ப் புண்கள் வந்தால்:

சீழ் பிடிக்காத புண்ணுனல், கடுக்காயை நீரிலிட்டுக் காய்ச்சுங்கள். பிறகு வடிகட்டிய அந்த நீரைப் புண்ணின் மீது விட்டுக் கழுவுங்கள். பிறகு கடுக்காயைக் கல்லின் மீது வைத்து உரைத்து, அதன் சாந்தைப் புண்ணின் மீது தடவலாம்.

சீழ் இருக்கும் புண்ணை நன்ருகக் கழுவிவிட்டு, பூச்சி உருண்டையை உடைத்து இரண்டு மூன்று நாட்களுக்கு அதன் மீது தடவுங்கள். சீழ் வடிந்துவிடும். சுத்தமான அல்சர் புண், எந்த ஆண்டிசெப்டிக்கும் இல்லாமல் தானுகவே குணமாகும்.

தொதித்துப்போன புண்ணின் மீது பப்பாளிப் பழத்தை நறுக்கி, அதன் கறுப்புப் பகுதியைக் கூழ்மாதிரி எடுத்துப் பூசுங்கள். மறுநாள் கழுவிச் சுத்தமாக்கிவிட்டு, மறுபடியும் பப்பாளிப் பழக் கதுப்பைப் புண்ணின்மீது பூசுங்கள். தொதித்த புண் சாதாரணப் புண் ஆகும், இரண்டு மூன்று நாளில்.

நீரிழிவுப் புண்கள் (டயபடிக் அல்சர்): கத்தரிக்காயைச் சுட்டு, கற்பூரத்தை அதனுடன் கலந்து புண்மீது தடவுங்கள். புண் குணமாகும்.

வாய்ப் புண், நாக்கில் புண் இவற்றின் உபாதை குறைய: ஆலமரத்தின் கிளையிலிருந்து உறை போன்ற அதன் தோல் பகுதியை எடுத்துப் பொடியாக்கி, நீரோடு கலந்து அதன் சாற்றைப் புண்ணின் மீது தடவுங்கள். உணவுக்கு முன் கொய்யாச் செடிகளின் இலைகளை நன்ருக மெல்லலாம். இதில்



ஆஸ்பிரின் அல்லது ஆஸ்பிரின் உள்ள மாத்திரை இரும்புச் சத்து உள்ள (Iron) மாத்திரைகள், வைட்டமின்கள், எரித்ரோமைசின், பி. ஏ. எஸ். — இவற்றை உணவுடனே, உணவு உட்கொண்ட உடனேயோ சாப்பிடுவது நல்லது.

## முதல் உதவி

34. சிறு குழந்தைகளுக்கு ஜுரம் வந்தால், உடம்பை முழுக்கப் போர்த்தி விடாதீர்கள். ஜுரம் இறங்கும் வரை உடலில் ஆடை எதுவும் இன்றி விட்டு விடவும். குழந்தையை இறுக்கமாகப் போர்த்தி வைத்தால் ஜுரம் சீக்கிரத்தில் இறங்காது.

35. சிறு குழந்தைகளுக்கு மிக அதிக ஜுரம் வந்தால் நல்ல தல்ல. உடனே அதைக் குறைக்க முயல வேண்டும். இல்லையெனில் அது ஆபத்தாகும் வாய்ப்பு உண்டு. வலிப்பு வரவோ, மூளையைச் சேதப்படுத்தவோ கூடும்.

36. மிக அதிக ஜுரம் வந்தால்—

உடம்பிலிருந்து துணிகளை அகற்றி விடுங்கள். விசிறி கொண்டு நன்ருக விசிறுங்கள். மார்பை ஒரு துணியால் மூடுங்கள். துணியைக் குளிர்ந்த நீரில் நனைத்து நெற்றியிலும், காலிலும், கையிலும் போடுங்கள். ஈரத் துணிகளின் மீது விசிறுங்கள். துணிகள் காயக் காய, ஈரத் துணியை மாற்றி மாற்றிப் போட்டுக் கொண்டே இருங்கள்.

மிகக் குளிர்ந்த (ஐஸ்) மாதிரியான நீரை உபயோகிக் காதீர்கள். காய்ச்சல் அதிகமாகிவிடும்.

காய்ச்சல் அடிக்கும்போது நோயாளி சக்தியை நிறைய இழக்கிருர். அதனுல்கடலைத்துக் குளிர்ந்தநீரில்சர்க்கரையோ வெல்லமோ போட்டுக் கரைத்துக் கொடுத்து வரலாம்.

ஆஸ்பிரின் மாத்திரை கைவசம் இருந்தால் கொடுக்க வாம்.

37. அதிர்ச்சியுற்ற (ஷாக்) நிலையில் ரத்த அழுத்தம் மிக்க குறைந்த நிலைக்குப் போய்விடும். அதிகமான வலி, மிகத் தீவிரமான எரிபட்ட காயம், அதிகமான ரத்தப் போக்கு,

32. சிறு குழந்தைகளுக்கு மருந்து எப்படிக் கொடுப்பது, பல மருந்துகள் காப்ஸ்யூலாகவும், மாத்திரையாகவும்? 'ஸிரப்'பாகவும் வருகின்றன. முன்னதை விட 'ஸிரப்' விலை அதிகமுள்ளது. அதனால் நீங்களே 'ஸிரப்'பைத் தயார் செய்துகொள்ளலாம். மாத்திரையைப் பொடி செய்து வைத்துக்கொள்ளுங்கள். அல்லது காப்ஸ்யூலைத் திறந்து அதன் உள்ளே இருக்கும் பொடியை எடுத்துக் கொள்ளுங்கள். சூடாக்கிய பின் குளிர்ந்த நீரில், தேனுடன் அல்லது சர்க்கரையுடன் நன்றாகக் கலந்துகொள்ளுங்கள். ஸிரப் தயார்! டெட்ராசைக்ளின் அல்லது க்ளோரோக்வின் போன்ற வெகு கசப்பான மருந்துகளாயிருந்தால், தேனோ சர்க்கரையோ நிறையச் சேர்த்துக் கொள்ளவும்.

33. மருந்து எப்படி உட்கொள்ள வேண்டும் — வெறும் வயிற்றிலா, ஏதானும் உட்கொண்ட பிறகா?

சில மருந்துகள் வெறும் வயிற்றில் — அதாவது உணவுக்கு ஒரு மணிக்கு முன்னால் எடுத்துக்கொண்டால் நன்றாக வேலை செய்யும். சில மருந்துகளை உணவு உண்ட உடன் சாப்பிட்டால் வயிற்று உபாதையோ, மார்பில் எரிச்சலோ வராதிருக்கும்.

பெனிசிலின், ஆம்பிஸிலின், டெட்ராசைக்ளின்-இவற்றை உணவுக்கு ஒரு மணி முன்பு உட்கொள்ளலாம். டெட்ராசைக்ளின் மருந்தைச் சாப்பிடும்போது ஒரு மணி நேரத்துக்கு முன்போ, பின்போ, பாலை அருந்தாமல் இருப்பது நல்லது.




கார்போஹைட்ரேட் இருப்பதால், புண்ணுக்கு ஒரு கவசம் மாதிரி இது அமைந்து விடும்.

கடுக்காயை அரைத்து அதன் சாந்தைப் புண்ணின்மீது தடவலாம்.

வயிற்றில் அல்சர் புண் இருந்தால்: வாழை மட்டையின் சாறை நீருடன் கலந்து ஒரு நாளைக்கு மூன்று வேளை குடியுங்கள். (இந்தச் சாற்றில் 'அல்க்கலைன்' இருப்பதால் வயிற்றிலிருக்கும் அமிலங்களைச் சமன்படுத்திவிடுகிறது.)

7. தோலில் பூசணம் (fungus) காரணமாக சிரங்கு வந்தால்:

சீமை அகத்தியை நன்கு அரைத்து, அதன் சாற்றை ஒரு நாளைக்கு மூன்று முறை தடவவும்.

8. வயிற்றில் பூச்சிகள் இருந்தால்:

குடலில் உள்ள பூச்சிகளை ஒழிக்க, பப்பாளிப் பழம் உதவும். இதன் பழத்தையோ, இந்த மரத்தின் இலையையோ வெட்டும்போது வடியும் பால்போன்ற திரவத்தை மூன்று அல்லது நான்கு தேக்கரண்டி சேகரித்து வைத்துக்கொள்ளுங்கள். ஒரு கோப்பைச் சுடுநீரில் சம அளவு இதன் பாலும் தேனும் கலந்து குடியுங்கள்.

நாக்குப் பூச்சிகள் (Round worms) போக, பப்பாளிப் பழத்தின் விதைகளைப் பொடியாக்கி, ஒரு தம்ளர் பாலுடன் கலந்து இரண்டு நாள் அருந்துங்கள். அல்லது, மாதுளை மரத்தின் இலைகளைப் பிழிந்து அதன் சாற்றை ஒரு தம்ளர் பாலுடன் சூடாக்குங்கள். காலையில் உணவுக்குமுன் அரைத் தம்ளர் அருந்துங்கள். இரண்டு மணி நேரம் கழித்து மீதியைக் குடியுங்கள். அடுத்த இரண்டு மணி நேரத்துக்குப் பிறகு இரண்டு டேபிள்ஸ்பூன் அளவுக்கு விளக்கெண்ணெய் குடியுங்கள்.

நாடாப் பூச்சிகள் போக, வேப்பிலையை நன்றாகச் சந்தனம் போல் குழைத்து அரைத்து, வாரத்துக்குத் தினம் காலையில் வெறும் வயிற்றில் ஒரு சிறு கோலி உருண்டை அளவு உட்கொள்ளவும். இரண்டாவது வாரம் உண்ண வேண்டாம். மூன்றாவது வாரம் மறுபடி வேப்பிலையை அரைத்து வெறும் வயிற்றில் முதல் வாரம் போல் உட்கொள்ளவும்.

சிகிச்சை காலத்தில் குடும்பத்தினர் எல்லாருமே இதை உட்கொள்ள வேண்டும்.

9. மஞ்சள் காமாலைக்கு:

கீழாநெல்லிச் செடியின் தழையை நன்றாக அரைத்துச் சாந்துபோல் ஆக்கிக் கொள்ளவும். வெறும் வயிற்றில் இந்தச் சாந்தை அதிகாலையில் சாப்பிடவும். இது காமாலை நோயின்போது வாந்தி வராமல் தடுக்க உதவும். வாந்தி தடுக்கப்பட்டால் உணவு உட்கொள்ள உதவியாயிருக்கும்.

கரிசிலாங்கண்ணி இலையை வேகவைத்து, தினம் ஒரு வேளை சாப்பிடலாம். அல்லது கரிசிலாங்கண்ணி இலையை ஒரு ஸ்பூன் விளக்கெண்ணெய் விட்டு வேகவைத்து அதனுடன் பூண்டும் சேர்த்து நோயாளிக்குக் கொடுக்கலாம். வாந்தி எடுப்பது குறையவும், மலமும் சிறுநீரும் சாதாரண நிறத்துக்கு வரவும் இது உதவும்.

10. நீரிழிவு நோய்க்கு:

தொட்டால் சுருங்கிச் செடியை வேரோடு எடுத்து அரைத்து, அரிசியுடன் சமைத்து, கஞ்சி மாதிரியான பதத்தில் செய்து, தினமும் குடிக்கலாம். வேப்பிலையும், பாகற்காயும் நீரிழிவு நோயைக் கட்டுப்படுத்த உதவும்.

11. ஆஸ்துமாவுக்கு:

ஆடாதோடைச் செடியின் இலையை வேகவைத்து எடுத்துக்கொண்டு, வேறு பெரிய இலை ஏதேனும் கொண்டு அதைச் சுற்றிவைத்துக் கொண்டு புகையுங்கள்.



முன்பும், உணவு வகைகளைக் கையாளும் முன்பும் கைகளைச் சோப்பினால் சுத்தமாக்குதல் அவசியம்.

27. வயிற்றுப் போக்கினால் குழந்தைகளுக்கு உடலில் நீர் வற்றிப்போய் உடல் வறட்சி (டீ ஹைட்ரேஷன்) வந்துவிடும். இந்த நிலையில் நிறைய நீரை, சர்க்கரை அல்லது தேன் அல்லது உப்பு இட்டுக் கலந்து சிறிது சிறிதாகக் கொடுத்து வரவும்.

28. மருந்துகளைத் தேவையான அளவு, சரியானபடி உட்கொள்ள வேண்டும். மருந்துகளைஉபயோகிப்பதில் சில அபாயங்களும் உண்டு என்பதை உணர வேண்டும். மருந்துகள் பயன் தராமலோ, புதுக் குழப்பங்களை விளைவித்தாலோ அவற்றை உட்கொள்வதை நிறுத்திவிடுங்கள். சந்தேகம் வந்தால் மருத்துவரை விசாரியுங்கள். மருந்தின் மீதுள்ள காலாவதி தேதியைக் கவனியுங்கள்: காலாவதியான மருந்து நல்லதைச் செய்யாதது மட்டுமல்ல, கெடுதலை நிச்சயம் செய்யும். நன்றாக உணவு உட்கொள்ளும் நபருக்கு அதிகப்படியான வைட்டமின்கள் தேவையில்லை.

29. சாதாரண வயிற்றுப் போக்குக்குகூட க்ளோராம்பெனிகால் மருந்து உபயோகிக்கிறார்கள். இது தவறு. டைபாயிட் போன்ற சீரியஸ் நோய்களுக்குமட்டுமே இதை உபயோகிக்கலாம்.

30. பி-12, லிவர் எக்ஸ்ட்ராக்ட் மருந்துகள், சோர்வையோ ரத்தக் குறைவையோ நிவர்த்தி செய்யா. சில வேளைகளில் இவை பாதகமாகவே போகக் கூடும். மருத்துவர் ஆலோசனையின்படி இந்த ஊசிகளைப் போட்டுக் கொள்ள வேண்டும். ரத்தக் குறைவு நோய்களுக்கு இரும்புச் சத்து மாத்திரைகளே போதுமானவை.

31. குறிப்பிட்ட வேளைகளில் மருந்து உட்கொள்ளுவது முக்கியம். எட்டு மணி நேரத்துக்கு ஒரு முறை என்றால் — காலை பிற்பகல், மாலை என்று எடுத்துக் கொள்ளலாம். ஆறு மணிக்கு ஒருமுறை என்றால் காலை,முற்பகல், பிற்பகல் இரவு என்று நாலு வேளை உட்கொள்ளலாம். நாலு மணிக்கு ஒரு முறை என்றால், கிட்டத்தட்ட ஒரே மாதிரி இடைவெளி விட்டு ஆறு வேளைகள் சாப்பிட வேண்டும்.

உணர்ச்சி ஏதும் இல்லையென்றால் தொழுநோயின் அறிகுறியாக இருக்கலாம். இரண்டு கைகளிலும், கால்களிலும் அல்லது பாதங்களிலும் தொடு உணர்ச்சி இல்லையென்றால் நீரிழிவு நோயாக இருக்கலாம். உடலின் ஒரு குறிப்பிட்ட பகுதியில் மட்டும் உணர்ச்சி இல்லை என்றால் முதுகில் உண்டாகும் வலி, அல்லது அடிபட்டதன் விளைவாக இருக்கலாம்.

## அபாய நோய் நிலைகளின் அறிகுறிகள்

24. உடலிலிருந்து அதிதமான ரத்தப் போக்கு; ரத்த வாந்தி; உதடுகளும் நகப் பகுதிகளும் நீலம்பாரித்தல்; மூச்சு விடுவதில் சிரமம்; நினைவற்ற நிலை; வலுவற்ற நிலையில், எழுந்து நின்றாலும் மயங்கிவிழுதல்; சிறுநீர் கழிக்காமல் ஒருநாளுக்கும் மேல் ஆகி இருத்தல்; ஒரு நாளுக்கு மேலாக, நீராகவோ திரவ உணவாகவோ உட்கொள்ள முடியாமை; குழந்தைகளுக்கு ஒரு நாளைக்கு மேற்பட்ட வாந்தி பேதி; கறுப்பான மலம் கழித்தல் அல்லது ரத்த வாந்தி எடுத்தல்; வயிற்றுப்போக்கு இன்றியும், மலம் கழிக்காத நிலையிலும் வாந்தி எடுத்தலோடு கூடிய அதிகமான வயிற்று வலி; மூன்று நாட்களுக்கு மேற்பட்ட எந்தக் கடுமையான வலி; கழுத்து விரைத்துப்போய், முதுகு வில்லாக வளைந்து தாடை விறைப்பாக மூடிக்கொள்ளுதல்; காய்ச்சலோ, கடுமையான நோயோ ஒன்றுக்கு மேற்பட்ட நாள் இருக்கும்போது வலிப்பு வருதல்; நாலைந்து நாட்களாகக் குறைக்க முடியாத அளவு மிக அதிகக் காய்ச்சல்; உடல் எடை கணிசமான அளவு குறைந்துகொண்டே வருதல்; சிறுநீரில் ரத்தம் போதல்; புண்கள் வளர்ந்து பெரிதாகிக் குணப்படுத்த இயலாத நிலைமை; உடலின் எந்தப் பகுதியிலும் வரும் கட்டி — வளர்ந்து பெரிதாகும் நிலை; பிள்ளைப் பேறு காலத்தில் அதிக ரத்தப் போக்கு; பன்னீர்க்குடம் உடைந்தும் வலி எடுக்காமல் தாமதம் — முகம் வீங்கிப் போதல்.

25. மருந்து இன்றியே பல நோய்களைத் தடுக்கவும், குணப்படுத்தவும் முடியும். நீரைச் சரியாக உபயோகித்தால், மருந்துகள் ஏதும் செய்வதைவிட பன்மடங்கு நல்லது செய்யும்.

26. வயிற்றுப் போக்கு வராமல் தடுக்க, குடிநீரையும் சமையல் செய்யும் நீரையும் காய்ச்சவேண்டும். குழந்தைகளைப் பொறுத்தவரையில் இது மிக முக்கியம். உணவு உண்ணு



12. தலையில் பொடுகு போக:

தயிருடன் எலுமிச்சைச் சாறு அல்லது வேப்பிலைச் சாற்றைத் தலையில் தேய்க்கவும். ஒரு மணி நேரம் ஊறிய பிறகு தலையை அலசுங்கள். வாரம் ஒரு முறை இப்படிச் செய்தால் பொடுகு நீங்கும்.

13. பல்வலி போக:

கிராம்பு மென்று அதன் சாற்றை வாயில் சற்று நேரம் தங்க விடுங்கள். அல்லது முந்திரி இலையை வாயில்மென்று அதன் சாற்றை வாயில் தங்கச் செய்யுங்கள் சற்று நேரம். மாவிலையை எரித்து அதிலிருந்து கிடைக்கும் பொடியும் பல்வலியைக் குறைக்க உதவும்.

14. தலையில் உள்ள பேன்கள் போக:

மண்ணெண்ணெயுடன் தினம் தலைக்குத் தடவும் எண்ணெயைச் சமமாகக் கலந்து எடுத்துக்கொண்டு, மாலையில் தலையின் எல்லாப் பகுதிகளிலும் படும்படி தேய்த்துக்கொள்ளுங்கள். பிறகு தலையை ஒரு துவாலையால் நன்றாகச் சுருட்டிக் கட்டிவிடவும். மறுநாள் காலை சீயக்காய் தூள் கொண்டு தண்ணீர் விட்டுத் தலையைச் சுத்தம் செய்யுங்கள். நல்ல சீப்பு எடுத்துச் சீவிவிட்டு, சீப்பை மண்ணெண்ணெய் கொண்டு நன்றாகக் கழுவுங்கள்.

15. முகப் பருக்கள் போக:

தினமும் இரண்டு மூன்று முறை முகத்தை சோப்புப் போட்டு நீரால் கழுவுங்கள். சூரிய ஒளி படும்படியாக நில்லுங்கள். நன்றாகச் சாப்பிட்டு, நிறையத் தண்ணீர் குடித்து, நன்றாக உறங்குங்கள். உருண்டையாக வீங்கி, சீழும் கோத்துக் கொண்டால் மட்டுமே டெட்ராசைக்ளின் காப்ஸ்யூல் சாப்பிடவும். பருவைக் கிள்ளவோ, தொட்டு நெருடவோ வேண்டாம்; அது ஆபத்தானது.

16. மாதவிடாயின்போது வலி இருந்தால்:

பாகற் செடியின் இலையை, சிறு மிளகும் பூண்டும் சேர்த்து அரைத்து வைத்துக் கொள்ளவும். நாளைக்கு ஒரு வேளை வீதம் மூன்று நாளைக்கு இதைச் சிறிது உண்ணவும்.

படுக்கையில் படுத்தபடியே இருக்க வேண்டாம். அது வலியைக் குறைக்காது. வீட்டுக்குள்ளே மெல்ல நடக்கலாம்; சிறு சிறு வேலைகளைச் செய்யுங்கள். சூடான நீரைப் பருகுங்கள்; அல்லது சூடான இரவ உணவு அருந்துங்கள். பாதங்களைச் சுடுநீரில் சற்று வைத்திருங்கள். நல்ல உணவு உட்கொண்டு உடம்பைச் சுத்தமாக வைத்திருந்து, நன்ருக உறங்கி, சாதாரண வேலைகளைச் செய்யுங்கள்.

## சில எச்சரிக்கைகள்

17. சிலர் பேதி மாத்திரைகளை அடிக்கடி சாப்பிடுவார்கள். அதிலும், எனிமா கொடுப்பது பல வீடுகளில் சர்வ சாதாரணமாக நடைபெறுகிறது. சிலர் காய்ச்சலும், வயிற்றுப்போக்கும் இது மாதிரி எனிமாக் கொடுத்து வயிற்றைச் சுத்தப்படுத்தி விட்டால் போய்விடும் என்று நினைத்து, கடுமையான பேதி மருந்துகளை உட்கொள்ளுவர். இது நோயாளியை இன்னும் பலவீனமாக்கிவிடும். குடலையும் பாழாக்கிவிடும்.

நினைவிருக்கட்டும்: விஷம் அருந்திய நபருக்கு மட்டுமே வயிற்றை முழுதும் சுத்தமாக்கமுவும் முயற்சியில் ஈடுபட வேண்டும். மலச் சிக்கலுக்கு மில்க் ஆஃப் மக்னீஷியா அல்லது மக்னீஷிய உப்பு சிறு அளவு சாப்பிடலாம்.

18. நோய்கள்:அவை பற்றிய குழப்பங்கள்:



ஒரு குழந்தை மெல்ல, மெல்ல மெலிந்துபோய், வயிறு பெரிதாகக் காணப்பட்டால், காரணம் இதில் ஏதேனும் ஒன்ருக இருக்கலாம் — ஊட்டச் சத்துக் குறைவு; அதிகமான நாக்குப் பூச்சித் தொந்தரவு; முற்றிய காச நோய்; சிறுநீர்ப் பாதை நோய்; ஈரல் நோய்; ரத்தச் சோகை.

வயதான நபருக்குக்கணுக்காலில், இறந்த — வளர்ந்து வரும் புண் இருந்தால்—ரத்த ஓட்டக் குறைவு; நீரிழிவு; எலும்பில் தொற்று நோய்; தொழு நோய்; சருமத்தைத்தாக்கும் காச நோய்; முற்றிய சிஃபிலிஸ்.



19. ஒரு நோயாளி சுவாசம் விடுவதை நன்ருகக் கவனிக்க வேண்டும். மூச்சின் வேகம்; எத்தனை தடவை மூச்சிழுக்கிருர்; மூச்சு விடச் சிரமப்படுகிருரா என்பதைக் கவனிக்க வேண்டும். மார்பு ஒரு சீராக ஏறி இறங்குகிறதா என்று பார்க்க வேண்டும்.

உங்களிடம் கடிகாரம் இருந்தால் ஒரு நிமிடத்துக்கு எத்தனை முறை மூச்சு விடுகிருர் என்பதைக் கவனியுங்கள். நிமிஷத்துக்கு 12 லிருந்து 20 வரை பெரியவர்களுக்கும் 30வரை குழந்தைகளுக்கும், மிகச் சிறு குழந்தைகளுக்கு 40வரையும் இருப்பது சகஜம். அதிகமான காய்ச்சலோ, சுவாசக் குழாயில் கோளாறு இருந்தாலோ அல்லது நியுமோனியா காய்ச்சல் இருந்தாலோ மூச்சு இழுத்தலும் விடுதலும் இன்னும் எண்ணிக்கையில் அதிகமாகலாம்.

நாடித் துடிப்பு: பெரியவர்களுக்கு நிமிஷத்துக்கு 60லிருந்து 80 வரை; குழந்தைகளுக்கு 60லிருந்து 100வரை; மிகச் சிறுகுழந்தைகளுக்கு 100லிருந்து 140 வரை.

20. கண்கள்: கயநினைவிழந்தோ, தலையில் பலத்த அடிபட்டோ கிடக்கும் நபரின் கண்கள் இரண்டையும் பரிசோதியுங்கள். இரண்டு கண்களிலும் உள்ள பாப்பா வித்தியாசப்பட்டால் நிலைமை அபாயம் என்று உணருங்கள். பாப்பா விரிந்து பெரிதானல் அதிர்ச்சி ஏற்பட்டிருக்கிறது என்றும் சுருங்கிச் சிறிதானல் விஷத்தின் காரணமாகவோ, சில மருந்துகளின் விளைவாகவோ இருக்கலாம்.

21. வயிறு: சத்தமே இல்லாத வயிறு, குலைக்காத நாய் மாதிரி. ஜாக்கிரதை!

22. தாடை இறுகிப்போய் வாயைத் திறக்க முடியாமல் இருந்தால் டெடனஸ் காரணமாக இருக்கலாம். அல்லது தொண்டையிலோ, பல்லிலோ கிருமித் தொற்று (இன்ஃபெக்ஷன்) இருக்கலாம்.

23. கை கால் அல்லது உடலில் வேறு பகுதிகளில் உணர்ச்சி குறைந்து இருந்தால் — நபரை ஒரு நாற்காலியில் அமரச் செய்து கண்களை மூடிக்கொள்ளச் சொல்லுங்கள். தோலின் பல பகுதிகளையும் லேசாகத் தொடவோ, குத்தவோ செய்யுங்கள். உங்கள் கை படும் இடத்தில் உணர்ச்சி இருந்தால் ஆம் என்று சொல்லச் சொல்லுங்கள். ஏதாவும் நிறமாற்றம் அல்லது புள்ளி விழுந்த இடத்தைச் சுற்றித் தொடும்பொழுது

எழுந்து லயோலா கல்லூரி—வரை வாக்கிங் போய்விட்டுத் திரும்புவேன். 'டேய்லி பேப்பர் படித்து, குளித்து, பூசை ஆன பின்னர் ஒன்பதரை மணிக்கு ஆபீஸ். மத்தியானம் லஞ்ச் ஆன பிறகு அரை மணி நேரம் ஓய்வு. (ஸ்ட்ரிக்ட் வெஜிடேரியன். குறிப்பாக சப்பாத்தி போன்ற கோதுமைப் பண்டங்கள் தான் பிடிக்கும்) மாலை வேளைகளில் ரிசப்ஷன், மீட்டிங் இம்மாதிரி எங்காவது போவேன். ராத்திரி தமிழ்ப் பத்திரிகைகள், காமர்ஸ், டைஜஸ்ட் போன்ற பத்திரிகைகள் படிப்பேன்.''

## "லக்ஷ்மி"

''காலை எழுந்ததும் குளித்துவிட்டுப்பிரார்த்தனை செய்வேன். திருவாசகம், அபிராமி அந்தாதி இவற்றிலிருந்து கட்டாயம் ஒரு பாட்டு சொல்வது வழக்கம். பிற எழுத்தாளர் கதைகள், மெடிகல் சம்பந்தமான புத்தகங்கள் இவைகளைப் படிக்கிறேன். பிரசுரமான என் கதைகளை ஒரிஜனலுடன் வைத்து ஒப்பிடுகிறேன். பிற்பகலிலோ, மாலையிலோ வெளியே செல்ல நேர்ந்தால் சந்திக்கும் இடங்கள், கேரக்டர் குறித்து வைத்துக்கொள்கிறேன். இரவு டி. வி. நியூஸ் கேட்டு விட்டு டீ போட்டுக் குடித்தான பிறகு எழுதத் துவங்குவேன்: பன்னிரண்டு ஒரு மணிவரை ஆகிவிடும்.''

## எம். எம். இஸ்மாயில்

இப்போது ஃப்ரீயாக இருக்கிறார். யார் வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் சந்திக்கலாம் என்ற நிலை உள்ளதால் அரை நாள் விசிட்டர்களைச் சந்திப்பதிலேயே போய்விடுகிறது. முன்னுரைகள், கட்டுரைகள் விமரிசனங்கள் எழுதுகிறார். ஜூனியர் வக்கீல்கள் சில சமயம் கடினமான சட்ட நுணுக்கங்களில் யோசனை கேட்க வருகிறார்கள். தொழில் அறிவை மேலும் வளர்த்துக் கொள்ள உதவுகிறது. அபார ஞாபக சக்தி உள்ளவர் என்று பெயர் வாங்கினாலும் 'எல் அதுதான் இல்லை. மடிப்புக் கலையாமல் வரும் ஹிந்து, எக்ஸ்பிரஸ் இரண்டையும் மனைவி படித்து முடித்த பிறகுதான் பொறுத்திருந்து இவர் படிக்கிறார்! பிறகு வாக்கிங் — சுமார் நாற்பது நிமிடங்களுக்கு. மெயின் ரோடிலிருக்கும் மாகாளி அம்மன் கோவிலைச் சுற்றிக்கொண்டுதான் வீட்டுக்கு வருவார். இடதுபுறமாக வாக்கிங் முடித்தாலும் மீண்டும் வலம்புறமாக வந்து மாகாளி அம்மன் கோவிலை ஒரு சுற்றுச் சுற்றிவிட்டுத்தான் வீடு. இது மாற்ற முடியாத ருட்டீன். ('அப்போதுதான் மனசுக்குச் சந்தோஷமாக இருக்கிறது!') குளித்துவிட்டு இருபது நிமிடம் பூசை. அப்புறம் உணவு — பிறகு அலுவலகம். கர்நாடக இசையிலும் நாடகங்களிலும் ஈடுபாடு இருப்பதால் மாலை இந்நிகழ்ச்சிகளை, சௌகரியத்தைப் பொறுத்து ரசிப்பதுண்டு. (நல்ல கச்சேரியா இருந்தால் 'டேப்' கலெக்ட் செய்வதுமுண்டு.) இரவில் படுக்கப் போகு முன் இதுவரை படிக்க என்று நேரம் ஒதுக்கவில்லை. இனி குறிப்பிட்ட நேரம் ஒதுக்கவிருக்கிறார்.

தொழிற்சங்கத் தலைவரும், சம்ஸ்கிருத அறிஞருமான **திரு. வி. பி. சிந்தன்**

காலை ஐந்தரை மணிக்கு எழுந்தவுடன் தேனும் எலுமிச்சம்பழ சாறும் அருந்திவிட்டு வாக்கிங் கிளம்புகிறார். நாற்பது நிமிட நடைக்குப் பிறகு தினமணி, ஹிந்து, எக்ஸ்பிரஸ் மூன்றையும் அரை மணியில் வாசித்து விட்டு (முக்கியமாக தலையங்கம்) போன் கால்களுக்குப் பதில் சொல்லிக் கொண்டே பலதரப்பட்ட விசிட்டர்களிடமும் விசாரிக்கிறார். குளியல் முடிந்தால், அன்றைக்குக் கவனிக்கப்பட வேண்டிய தொழிற்சங்கப் பணிகளுக்கான எழுத்து வேலையில் ஈடுபடுகிறார். எட்டு மணிக்கு வெளியே கிளம்பினால் கட்சி அலுவலகம், தலைமைச் செயலகம், இந்தியத் தொழிற்சங்க மையம், தொழிற்கூடங்கள் இவற்றிலெல்லாம் வேலைகளை முடித்துக்கொண்டு மூன்று மணிக்குள் வீடு திரும்புகிறார். அரிசிச் சோறு, வேகவைத்த காய்கறி,



× திரு பி. மருதை பிள்ளை  × திருமதி லக்ஷ்மி





× திரு எம்.எம். இஸ்மாயில்  × மேஜர் ஜெனரல் எஸ்.பி. மகாதேவன்





× திரு P. B. சீனிவாசன்  × திரு வி.பி. சிந்தன்

வள்ளியம்மா, 'காதுக் கடுக்கன் தாரேன், கெண்டை போட்ட வேட்டி தாரேன், வாங்க மச்சான், வாங்க மச்சான், வாங்க மச்சான் திருநாளுக்கு!' என்று மெல்லிய குரலில் பாடியது கேட்டு முத்தழகு சிரித்துக் கொண்டார். வள்ளியம்மா சாதாரணமாகப் பாட்டெல்லாம் பாடமாட்டாள். வயலில் நாற்று நடும்போதும், கதிர் அறுக்கும் போதும், களத்து மேட்டில் நெல் தூற்றும் போதும் மற்ற ஆண் பெண்களுடன் சேர்ந்து அந்தந்த நேரத்துக்கு ஏற்ற கிராமியப் பாடல்களைப்பாடுவதோடுசரி. வீட்டுக்கு வந்து விட்டால், பாட்டுக்கும் கூத்துக்கும் அவளுக்கு நேரம் இருந்ததில்லை. இன்று அவள் பாட்டும் சிரிப்புமாக இருந்ததற்குக் காரணம் இருந்தது தான் முத்தழகைப் புன்னகை கொள்ளச் செய்தது.

''என்னது, பாட்டெல்லாம் பலமா இருக்குது?''

வள்ளியம்மா வெட்கப்பட்டுக் கொண்டே அவரைப் பார்த்தாள். பதில் சொல்லவில்லை.

''பட்டணத்துக்குப் போற தெம்பா?''

வள்ளியம்மா ஒப்புக்கொண்டதன் அடையாளமாகமேலும் அதிகமாக வெட்கப்பட்டுப் புன்னகை செய்தாள்.

''அப்பா? இனிமேப்பட்டு அதைப் பிடிக்கக் கைசெவக்க வேணும் இல்லையா?''

அவர் 'அதை' என்று சுட்டிக் காட்டிய திசையில் அவள் பார்வை நகர்ந்தது. சுவரில் துருப்பிடித்த ஆணி ஒன்றில் தொங்கிக் கொண்டிருந்த கதிர் அரிவாள் மீது விழுந்த பார்வையை நீக்கி, ''ஆமாங்க. பட்டணத்துல இதுக்கெல்லாம் இனிமேப்பட்டு வேலை இல்லைதான். இனிமேயாச்சும் சொகமா இருக்கலாமுங்க. நம்ப ஏழுமலைதான் கை நெறையச் சம்பாதிக்கிறானே'' என்று அவர் சொன்னதை ஒப்புக்கொண்டவளாய் அவள் மலர்ச்சியுடன் சிரித்தாள்.

அவர் பதில் சொல்லாமல் பெருமூச்செறிந்தார். சற்றுப் பொறுத்து, இருவரும் பெட்டி, படுக்கை சாமான்களை மூட்டை கட்டும் வேலையில் ஈடுபட்டார்கள்.

---



ஸாரி, இந்த இதழ் துணுக்குகள் ஒன்றன்' பின் ஒன்றாக அனுமார் வால் போல் நீளுகின்றன. பொறுமையாகப் பல பக்கங்களைப் புரட்டித் தொடர்ச்சியாக அவற்றைப்



# கதிர் அரிவாள்

ஜோதிர்லதா கிரிஜா

நல்ல கறுப்பு என்பதோடு வள்ளியம்மா மூக்கும் முழியுமாக இல்லைதான். சப்பையான மூக்கும், வாய்க்கு வெளியே துருத்திக் கொண்டிருந்த இரண்டு பெரிய முன் பற்களுமாக அவள் அவருக்குத் திருஷ்டி கழிக்க வந்த சோளக் கொல்லைப் பொம்மை மாதிரிதான் இருந்தாள். சின்ன வயதிலிருந்தே சேர்ந்து பழகி அத்தை மகளான அவளின் குண நலன்களை நன்கு புரிந்து கொண்டிருந்ததாலும், வெளி அழகைப் பொருட்படுத்தாத தாலும்மனமுதிர்ச்சி தம்மிடம் இயல்பாகவே இருந்தமையாலும்தான் அவர் அவளை முழு மனத்துடன் மணந்து கொண்டார். ஊரில் எத்தனையோ பேர் அவரை அது குறித்து எவ்வளவோ கேலி செய்ததுண்டு. ஆனால் அவரோ யாரையும் சட்டை செய்யவில்லை.

அவர்களின் ஒரே மகன் ஏழுமலைக்கு ஆறு மாதங்களுக்கு முன்னால்தான் திருமணம் நடந்தது. பட்டணத்தில் அவன் பியூனாக இருந்தான். பத்தாவது படித்து முடித்ததும் அந்த வேலைதான் கிடைத்தது. எனினும் கொஞ்ச நாள் கழித்து ஏதோ பரீட்சையில் தேறினால் எழுத்தன் வேலை கிடைக்கும் என்று சொல்லி யிருந்தான். பரம்பரைத் தொழிலை அவன் செய்து சோற்றுக்கும் துணிக்கும் அல்லாடும்படி நேராது என்பதில் இருவருக்கும் மனம் கொள்ளாத மகிழ்ச்சி. மருமகள் கிளி மாதிரி இருந்தாள். மாநிறம். பெரிய கண்கள். துருதுருவென்று அழகாய் அலையும் கண்கள். கூர்மையான மூக்கு. கிட்டத்தட்ட ஏழுமலையின் உயரத்துக்கு இருந்தாள். அவளும் படித்திருந்தாள். ஏதோ சர்க்கார் அலுவலகத்தில் அவளும் நான்காம் வகுப்பு ஊழியையாக வேலை செய்து கொண்டிருந்தாள். அவளும் கூடக் கொஞ்ச நாள் கழித்து எழுத்து வேலைக்குப் போகலாம் என்று அவர்கள் கேள்விப்பட்டிருந்தார்கள். இதனால், தங்கள் துன்பங்கள் இறந்த காலத்துப் பழங்கதையாக மாறப் போவதை எண்ணி இருவருமே நிம்மதியடைந் திருந்தனர்.

படி இறங்கித் தெருவுக்கு வந்ததும், ''எதுக்கும் கதிரறுக்கற அரிவாளை எடுத்து வச்சுக்கறலாம். நான் போயி சாவியை வாங்கிட்டு வாரேன்'' என்று கூறிய முத்தழகை அவள் வியப்புடன் பார்த்தாள்.

''அது என்னத்துக்கு? கதிரும் கிதிரும் பட்டணத்தில எங்கிட்டு அறுக்கப் போறமாம்? நீங்கதானே சொன்னிய இனிமே அதைப் பிடிக்க வாணாமின்னு?''

''அது சரிதான் பிள்ளே. ஆனாலும் எங்க முப்பாட்டன் காலத்து அரிவாளாச்சே? ஞாபகத்துக்கு எடுத்து வச்சுக்கறலாம். ஆணியில தொங்கின குடிசைக்குக் குடிவர்றவங்க எடுத்துக்குவாங்க!... நீ இங்னனே இரு. நான் போயாறேன்!''

சிறிதே நேரத்தில் அவர் அரிவாளுடன் திரும்பி வந்தார். தெருவிலேயே வைத்து மூட்டையைப் பிரித்து அதற்குள் கதிர் அரிவாளை வைத்துக் கட்டினார்.

பட்டணத்து வாழ்க்கை இருவருக்கும் ஒரு மாறுதலாக இருந்தது. மருமகள் வேலைக்குப் போவதால் வள்ளியம்மா முழுக் குடும்பப் பொறுப்பையும் மனமுவந்து ஏற்றுக்கொண்டாள். முத்தழகுக்குத்தான் அவ்வளவாகப் பொழுது போகவில்லை. நேரம் நகருவேனா என்றது. வள்ளியம்மா ஒரு தாய்க்கும் மேலாக நடந்து கொண்டதால், மருமகள் சரோஜா அவளிடம் தனது இயல்பான துடுக்குத் தனத்தைக் காட்டவே வாய்ப்பு இல்லாது போயிற்று. மகனுக்கும் அவளுக்கும் அடிக்கடி வார்த்தைகள் தடித்ததைக் கவனித்தாலும் இருவரும் நாசூக்காக ஒதுங்கி இருந்தனர்.

விளையாட்டுப் போல் ஒரு வருடம் ஓடி விட்டது. பெட்டியைத் திறந்தபோதெல்லாம் கண்ணில் பட்ட பட்ட கதிர் அரிவாளை எடுத்து ஓர் அருமைக் குழந்தையைத் தடவிக் கொடுப்பது மாதிரி முத்தழகு தடவுவார். அதற்கு முத்தம் கொடுக்காததுதான் பாக்கி. அதில் கொஞ்சம் கொஞ்சமாகத் துரு ஏறத் தொடங்கி விட்டிருந்தது.

அன்று இரண்டாம் சனிக்கிழமை. ஏழுமலைக்கும் சரோஜாவுக்கும் விடுமுறை. நன்றாகச் சமையல் செய்யுமாறு தாயிடம் பணித்திருந்தான். சரோஜா வழக்கம் போல் இந்தத் துரும்பை எடுத்து அந்தப் பக்கம் போடாமல் குஷாலாக நடை பழகிக்கொண் டிருந்தாள்.

சமையற்கட்டிலிருந்து கிளம்பி வந்த. வாசனைகள்.பசி இல்லாதவர் வயிற்றைக் கூட கிளறுவதாக இருந்தன. ஏழுமலை எட்டிப் பார்த்து, ''என்ன இருந்தாலும் உங்க கை மணமே தனிதாம்மா. சரோஜாவுக்கு ஒண்ணுமே தெரியாது. நீங்க வர்றவரைக்கும்

---

படிக்கவும்.—ஆசிரியர்

'ஜம்'மென்று சிறைவாசம்: 33 வயதாகும் ஜஸ்வந்த்சிங் சிறைக் கைதியாக 11 வருடங்கள்இருந்த காலத்துக்குள்படித்து ஒரு டிகிரி வாங்கினதோடல்

நான் ஓட்டல்காரனுக்குத்தான் பெரும்பாலும் அழுதுக்கிட்டிருந்தேன். என்னிக்காச்சும் அரை குறையா எதையாச்சும் சமைச்சேன்னு பேர் பண்ணும். அம்புட்டுத்தான்'' என்றான். குரல் தாழ்வாகவும் மருமகளுக்குக் கேட்காதவாறு கவனத்துடன் சொல்லப்பட்டதையும் பார்த்து வள்ளியம்மா சிரித்துக் கொண்டாள். 'பொஞ்சாதிக்கு இம்புட்டுப் பயமா?' என்று எண்ணிக் கொண்டாள்.

சாப்பாடு பரிமாறுவதை மட்டுமாவது சரோஜா செய்யட்டும் என்று ஏழுமலை கூறி விட்டதால், நண்பர்கள் வந்து அமர்ந்ததும் இலைகளைப் போட்டு அவள் ஒவ்வொன்றாகப் பரிமாறத் தொடங்கினாள். அவ்வப்போது வள்ளியம்மா அடுக்களையிலிருந்து தலையை நீட்டி எட்டி எட்டிப் பார்த்து, அந்த இலை காலி, இந்த இலை காலி, அதைப் பரிமாறு, இதைப் பரிமாறு என்று மெல்லிய குரலில் சொல்லிக் கொண்டிருந்தாள்.



''வட பழனியிலிருந்து கடிதம் வந்திருக்கு, பிரிக்கலாமா வேண்டாமான்னு யோசிக்கிறேன்!''
''ஏன்?''
''மொட்டைக் கடிதமா இருக்குமோன்னு பயமா இருக்கிறது!''
—பிரகாஷ் முரளி

சரோஜா அவ்வப்போது மாமியாரை மறைத்தாற்போல் நின்றாள். அவள் எட்டி எட்டிப் பார்ப்பது அவனுக்குப் பிடிக்கவில்லை. முத்தழகு பசியில்லை என்று சொல்லி இருந்தார். அவர்கள் எல்லோரும் சாப்பிட்டபிறகு தாம் சாப்பிடுவதாகச் சொல்லி வாசலில் அமர்ந்து விட்டார்.

எல்லோரும் சாப்பிட்டு முடிந்து நடுக் கூடத்தில் உட்கார்ந்து வெற்றிலை போடலாயினர்.

''டேய், ஏழுமலை! சாப்பாடு ஏ ஒன்று! யாரு அந்தம்மா? எந்த ஊர்க்காரங்க? நல்லாச் சமையல் பண்றாங்களே?'' என்று ஒருவன் விசாரித்தான்.

சரோஜா கண நேர இடைவெளியும் விடாமல் குறுக்கிட்டு, ''அவரு ஊர்ப்பொம்பளைதாங்க!'' என்றாள்.

எல்லாம் காதில் விழுந்த அதிர்ச்சியிலும் ஆத்திரத்திலும் முத்தழகு எழுந்து நின்றார். மகன் என்ன சொல்கிறான் என்று காதுகளைத் தீட்டிக் கொண்டார். அவன் ஒன்றும் சொல்லாதது அவரது ஆத்திரத்தை அதிகமாக்கிற்று. கூடவே, அவனால் என்ன செய்திருக்க முடியும் என்ற கேள்வியும் தோன்றியது. நாலு பேருக்கு முன்னால் ரசக் குறைவாக அவளை அவனால் ஒன்றும் பேசியிருக்க முடியாது என்பது புரிந்தது. 'அவங்க ஒண்ணும் யாரோ 'பொம்பளை' இல்லை, எங்க அம்மா!' என்ற உண்மையைச் சொல்லி மனைவியை அவமானப்படுத்த மகனால் முடியாதுதான். எனினும் அவர்கள் எல்லோரும் கிளம்பின பிறகு அவன் அது குறித்து என்ன செய்வதாக இருந்தான் என்பதைப் பொறுத்தே தனது வருங்காலம் அமையும் என்பதை மட்டும் அவர் உடனே தீர்மானித்துக் கொண்டார். மருமகள் சொல்லியது வள்ளியம்மாவின் காதில் விழுந்திருக்க வாய்ப்பில்லை. ஏனெனில் கிணற்று ராட்டினம் கடகடத்துக் கொண்டிருந்த ஓசையிலிருந்து அவள் பின்கட்டில் இருந்ததை அவர் தெரிந்துகொண்டார்.

அவர் திண்ணையிலே கண் மூடிப் படுத்திருந்தார். விருந்தினர்கள் போனதும் ''என்னங்க, நான் அப்படிச் சொல்லிவிட்டேன்னு கோபமா? எனக்குச் சட்னு உங்கம்மான்னு சொல்லிடப் போறீங்களோன்னு பயமாயிருந்திச்சு!'' என்று சரோஜா மகனிடம் குழைந்தது கேட்டது. முத்தழகின் காது மடல்கள் விறைத்துக் கொண்டன.

''அதனால என்ன பரவாயில்லை. ஆனா, நாளைக்குத் தெரிய வந்தா உனக்குத்தானே அசிங்கம்?'' என்று ஏழுமலை பதில் சொன்னதும் அவருக்குப் படபடக்கத் தொடங்கிற்று. அசட்டையாகவும், அலட்சியமாகவும் தாயைச் சமையற்காரப் பெண்பிள்ளை என்று சொன்னதற்கு எவ்வளவு சாதாரணக்குரலில் 'போனா போகுது' என்ற முறையில் பேசுகிறான். மன்னிக்கக்கூடிய விஷயமில்லை என்பதால் அவரது மார்பின்துடிப்பு மிகுந்து போனது. 'படிப்புக்கும் குணத்துக்கும் சம்பந்தமே இல்லை' என்று எண்ணினார்.

எழுந்தார். கூடத்துக்குப் போனார். மகனும் மருமகளும் என்னவோ சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள். தலையைக் குனிந்து கொண்டு அவர்களைக் கடந்த அவர், ''சாப்பிடலியாப்பா நீங்க? அம்மாவும் நீங்களும் உக்காருங்களேன்!'' என்று மகன் உபசரித்ததைக் காதில் வாங்காதவர் போல், பெட்டியைத் திறந்து கதிர் அரிவாளை எடுத்துக் கல்லூரலின் முனையில் வைத்துத் துரு நீங்க அதைத் தீட்டத் தொடங்கினார்.

---

லாமல் சட்டப் படிப்பில் பாக்கி வைத்திருந்த பேப்பர்களையும் முடித்திருக்கிறார் ''எல்லா வசதிகளுடனும் கூடிய ஒரு ஹாஸ்டலில் இருப்பது போல் இருக்கி

# வீட்டில் அனைவரின் கேசப் பராமரிப்புதானே? அதற்கு நம்பகமானது, விசேட ஃபேமிலி ஷாம்பூ பாமோலிவ்.



பாமோலிவ் ஷாம்பூ:
ரெகுலர், அல்லது
கூடுதலான
போஷாக்கிற்கு எக்.




பாமோலிவ். எல்லா வகைக் கேசத்திற்கும் ஏற்ப விசேட முறையில் தயாரிக்கப்பட்டுள்ளது. அது. வளமையான நவீன ஷாம்பூ. உங்கள் கேசத்தை நன்கு தூய்மை துலங்க வைக்கிறது. குழந்தைகளின் மென்மையான கேசத்திற்கோ மிகவும் ஏற்றது.

அது மட்டுமா? இவ்வகை ஷாம்பூக்களிலே சிக்கனமானது. பாமோலிவ் ஷாம்பூ—குடும்ப பட்ஜெட்டிற்கும் ஏற்றது.

**குடும்பத்தினர் கேசப் பராமரிப்புக்கு நேசமானது - உங்கள் பட்ஜெட்டிற்கும் ஏற்றது**

GK6E.PS.7 TM

# சூரியன் உதயம்



திருவோலக்க மண்டபத்தில் பூவிதழ் விழுந்தால் நசுங்கி வாசனைத் தைலமாக மணந்திருக்கும். அத்தனை கூட்டம். ஏதோ ஓர் அவசரச் செய்தியை எதிர்பார்க்கும் மக்கள் திரள். நீடித்துக் கொண்டிருக்கும் சாளுக்கியப் போரில் நிகழ்ந்து கொண்டிருக்கும் அவலங்களால் மக்களில் சிலர் வேதனையுற்றாலும், வெற்றிச் செய்திகளையே முழங்கின போர்முனை.

மன்னன் வீர ராஜேந்திர சோழன் அரியணையில் கம்பீரமாக வீற்றிருந்தான். மண்டல முதியோர் சபை அங்கத்தினர்களும், நாட்டுக்கோன் எனப்படும் பிரதம நிர்வாக அதிகாரியும் வந்திருந்தனர். அரச குடும்பத்தைச் சேர்ந்த மாநிலப் பதவிகளை வகிக்கும் இளவரசர்களும் மன்றத்தை அலங்கரித்தனர். போர் நடந்து கொண்டிருந்தமையால் பரிவாரத்தின் ஐம்பெருங் குழுவும், எண்பேராயக் குழுவும் குறைந்த அளவினதாகத் தோன்றியது.

வெளி நாட்டுத் தூதுவர் பலரும் இருக்கைகளில் முன்னதாக இருக்க, மலாய் நாட்

*றது'' என்பது ஜெயிலைப் பற்றிய அவரின் கருத்து. —'ஜீரா'. சாலையில் சமயக் குரவர்கள்: சைவ சமயக் குரவர் நால்வரின் பெயர்களையும் தாங்கிய திருஞான*

டுப் பயணியும், சீன நாட்டுப் பயணியும் சிறப்பு விருந்தினராக அமர்ந்திருந்தனர்.

அமைச்சர் செல்வராயன் மெல்ல எழுந்தார். வழக்கமாக மன்னருக்கு வரவேற்பு வழங்கு முகமாக அவர் பேச ஆரம்பித்தார்.

''மாபெரும் சோழ சாம்ராஜ்யத்தின் உண்மையான ஸ்தாபகன் என்று வர்ணிக்கப்படுபவரும், தமிழகம் முழுவதையும் ஒரே ஆட்சி அமைப்பில் நிர்வாகம் நடத்தியவரும் மூன்றும் நந்திவர்மன் ஆரம்பித்த கடற்படையை மீண்டும் துவக்கி, அதன் உதவியுடன், வட இலங்கையையும், பல்பழம் தீவு பன்னீராயிரம் தீவுகளை வென்று சேரன் கடற்படையை முறியடித்தவரும், தஞ்சையில் ராஜ ராஜேஸ்வரம் கோயிலைக் கட்டிய வருமான திருபுவனச் சக்கரவர்த்தியாகத் திகழ்ந்த ராஜ ராஜ சோழரின் பேரரும், வேங்கி நாட்டில் அரச பதவிக்கான சச்சரவுகள் ஏற்பட்டபோது அதில் தலையிட்டு, மேற்கத்திய சாளுக்கியர்களை எதிர்த்து அதே வேளை வட பாரதத்தில் கங்கை வரை தன் படை நடத்திச் சென்று வென்று கங்கைகொண்ட சோழவரம் என்ற பட்டத்தைப் பெற்றவரும், ஸ்ரீவிஜய ராஜ்யத்துடன் பெரும் கடற்போர் நடத்தி வெற்றி பெற்றவருமான




சம்பந்தர் சாலை, அப்பர் சாலை, சுந்தரர் சாலை, மாணிக்கவாசகர் சாலை ஆகியவை நெய்வேலி நகரில் உள்ளன! —ஆர். மார்க்கண்டன். ஒன்பது தலை

ராஜேந்திர சோழனின் மகனும், சாளுக்கியப் போரில் அவர்கள் தலைநகரான கல்யாணபுரத்தைப் பாழாக்கி வெற்றி பெற்று வீர அபிஷேகம் நடத்தி விஜய ராஜேந்திரன் என்ற பட்டத்தை ஏற்றவரும் ரெய்ச்சூர் போரில் வீர மரணமடைந்த ராஜாதிராஜனின் சகோதரருமான நமது மதிப்புக்குரிய சக்கரவர்த்திப்பெருமான் வீர ராஜேந்திரன் வாழ்க! அவர் தம் கொற்றம் வெல்க!''

''வேந்தே! ஒரு நியாயம் வழங்கப்பட்ட வழக்கு தங்கள் ஒப்புதலுக்குக் காத்திருக்கிறது.''

''வழக்கின் வரலாறு என்ன?'' மன்னன் 'நியாயத்தார்' பக்கம் திரும்பிக் கேட்டான்.




ஒரு டெரிகாட் சட்டை சலவைக்குப் போடப் போகும்போது ''மூணு ரூபாய்'' என்றார் கூசாமல். நான் பிரமிப்பிலிருந்து விடுபடுவதற்குள் அவர் தொடர்ந்தார்: ''போட்டால் ரெண்டு துணியாப் போடுங்க. அதே சார்ஜ்தான். மூன்றாகப் போட்டால் நாலு ரூபாய்! ஒரு துணிக்காக பில், கவர் எல்லாம் வேஸ்ட் பண்ண முடியாது!''

—ஈஸ்வர் குமார்

''வேந்தே! இந்த யுவர்கள் உத்தமசீலன், மாரப்பன் என்போர் இம்முதியவருக்குச் சொந்தத் தங்கை மகனும், ஆரத்துச் சகோதரி மகனும் ஆவர். இவர்களது குடும்பங்கள் நெருங்கிப் பழகியவை. முதியவருக்கு இருக்கும் நிலபுலன்களில் உரிமை கேட்டு இக்குடும்பங்களில் சச்சரவு ஏற்பட்டது. எனவே இந்த இரு யுவர்களும் இவருக்குச் சில்லறைத் தொந்தரவுகள் தந்து வந்தனர். எனவே இம்முதியவர் தன் இரண்டு பெண்களுக்கும் இந்த யுவர்களால் பாதுகாப்புக் குறைவு ஏற்படும் என்று முறையிடுகிறார்....''

''இதற்கு நியாயத்தாரின் ஒட்டுமொத்தத் தீர்ப்பு என்ன?'' மன்னன் வினா விடுத்தான்.

சில நொடிகள் அமைதி நிலவின.

நியாயத்தாரில் ஒருவர் எழுந்தார். ''வீட்டுப் பெண்டிர் பாதுகாப்புப் பற்றி முதியவர் அஞ்சுவதாலும், உறவு முறையின் உரிமையில் யுவர்கள் அவர் சொத்தில் பங்கு கேட்பதாலும் தீர்ப்பை இவ்வாறு வழங்கியுள்ளோம் மன்னவா!... முதியவர் தம்மிரு பெண்களையும் இந்த யுவர்களுக்கு மணமுடித்தால், பெண்மக்களின் பாதுகாப்புப் பிரச்னையும் தீரும், சொத்துப் பிரச்னையும் தீர்ந்துவிடும். எனவே அவ்வாறே தீர்ப்பு எழுதியுள்ளோம்.''

''யுவர்களே! நீங்கள் இத்தீர்ப்புக்குக் கட்டுப்படுகிறீர்கள் அல்லவா?''

''மகா மன்னரின் தீர்ப்புக்கு மறுப்பு இருக்க முடியுமா வேந்தே?''

''நல்லது. அப்படியானால் நீங்கள் முதியவருக்குக் கொடுத்த தொல்லைகளுக்குத் தண்டனையாகப் பெரிய கோயிலின் அணையா விளக்கை ஆளுக்கொன்றாக இரண்டாண்டுகள் பராமரிக்க வேண்டும்.''

''தங்கள் சித்தம் எங்கள் பாக்கியம் அரசே.''

சபையில் பலத்த கரவொலிகள்.

கைக்கொட்டல் ஒலி அடங்கிய பின் ஏற்பட்ட அமைதியை மெல்லக் கலைத்தவாறே ஏழெட்டுப் படை வீரர்கள் அமைதியாகத் தலை குனிந்து நடந்து வந்தனர்.

சபை சட்டென விறைத்தது. செய்தி யாதோ?

போர் வீரரில் ஒருவன் மன்னனுக்கு வாழ்த்தும், மரியாதையும் தெரிவித்துக்கொண்டு செய்தியை வெளியிட்டான்.

''தீராத நோய் வாய்ப்பட்டு வருந்திக் கொண்டிருந்த நம் எதிராளி சாளுக்கிய மன்னன் சோமேஸ்வரன் துங்கபத்ரா நதியில் மூழ்கி இறந்து விட்டதாகச் செய்தி. ஆனால் போரின் தீவிரம் குறையவில்லை. அவரது புதல்வர்கள் இருவரும் அரியணைக்குப் போட்டி யிட்டுக் கொண்டு மேன்மேலும் குழப்பம் விளைவிக்கிறார்கள். இருவருக்குமே போரை நிறுத்துவதாக எண்ணமில்லை.''

சாளுக்கியப் போர் சோமேஸ்வரன் மரணத்துக்குப் பின்னும் முடிவுறவில்லையா? அவனது புதல்வர்களின் அரியணைப் போட்டியோ, கலகமோ கூடப் போரை நிறுத்தவில்லை என்றால்....? வீர ராஜேந்திரன் பெருமூச்செறிந்தான்.

**வீ**ர ராஜேந்திரன் சபையிலிருந்து வெளியேறித் தன் இருப்பிடம் வந்தான். பின் மனம் மாறியவனாகச் சற்று உட்பக்கம் பாதுகாப்புடன் அமைக்கப்பட்டிருந்த அந்தப்புரத்தை அடைந்தான். இளவரசிகள் அபராஜிதாவையும், அமராவதியையும் அவன் பார்த்து முழுதாக மூன்று தினங்கள் ஆகிவிட்டனவே...

அபராஜிதா இளமையின் எழிற்கோலத்துடன், சர்வ அலங்கார பூஷிதையாக அமர்ந்து யாழ் மீட்டிக் கொண்டிருந்தாள்.

இங்கே அமராவதி தன்னைச் சுற்றிலும் சின்னச் சின்னப் பாத்திரங்களில் நீரை

---

ராவணன்: இந்திய தபால் தந்தி இலாகா வெளியிட்ட இராவணன் உருவம் பொறித்த 2 ரூபாய் தபால் தலையில் இராவணனுக்கு 9 தலைகள் மட்

# ஜலதோஷம் உங்கள் நாளையே கெடுக்க அனுமதிக்காதீர்கள்



## ஜலதோஷத்தைப் போக்கலாம்

நல்ல ஒரு நாளையே கெடுக்கும் மூக்கு ஒழுகுதல் அல்லது மூக்கடைப்பு, தலை கனம், தொண்டைக்கட்டு மற்றும் மார்சளி போன்றவற்றுடன் உள்ள ஜலதோஷத்திலிருந்து நிவாரணம் பெற ஒரு வழி இருக்கிறது.

## ஜலதோஷ மருந்து கொண்டு தாக்கிடுங்கள்

மற்ற உபாதைகளைப் போன்றே இதற்கும் சிகிச்சையளித்தால் போதாது. பாதிக்கப்பட்ட பாகங்களிலெல்லாம் ஒரே சமயத்தில் செயல் புரியவல்ல விசேட ஜலதோஷ மருந்தையே உபயோகியுங்கள்.

## கோல்டரின் ஜலதோஷத்திற்கு மட்டுமே

உங்கள் சுறுசுறுப்பைக் கெடுக்கும் அறிகுறிகள் அனைத்தையும் போக்குகிறது—கோல்டரின். இதிலுள்ள விசேட மருந்துப் பொருட்கள் ஜலதோஷத்தினால் பாதிக்கப்பட்ட எல்லா பாகங்களிலும் ஒருங்கிணைந்து செயல்புரிகின்றன. அதோடு, ஜலதோஷ எதிர்ப்பு சக்தியை வளர்த்திட இதில் வைட்டமின் C உள்ளது.

ஜலதோஷத்தினால் பாதிக்கப்படும் போது ஜலதோஷ மருந்தையே சாப்பிடுங்கள்.

# கோல்டரின்

விசேட ஜலதோஷ மருந்து

CASBC-64-172 TM

நிறைத்து வைத்துக் கொண்டு அதை ஒரு குழலால் தட்டி ஒலியெழுப்பி, நீரிசையை நேரிசையாக்கி அதில் மெய் மறந்திருந்தான்! வந்த சுவடு தெரியாமல் மன்னன் திரும்பி நடந்தான்.

இரவு அரசி வான்மதி அளித்த பழங்களையும், பாலையும் அருந்திவிட்டு சப்ர மஞ்சத்தில் புரண்டு கொண்டிருந்த வீர ராஜேந்திரனுக்கு உறக்கம் கிடைக்கவில்லை. மன்னன் மகன் அதிராஜேந்திரனோ போர்முனைக்கு மாற்றி மாற்றிச் செல்வதிலேயே அரண்மனையை விட்டுத் தூரப் போய்விடுகிறான்.

பராந்தகச் சோழன் காலத்தில் காவேரிக் கரையில் ரிக்வேதத்துக்குப் பாஷ்யம் ஏற்பட்டது. ராஜ ராஜ சோழன் ராஜ ராஜேஸ்வரம் கோயிலைக் கட்டினான். தந்தை ராஜேந்திரனோ கங்கை வரை படை நடத்திக் கங்கை கொண்ட சோழன் எனப் புகழ் பெற்றான்.

இந்த வீர ராஜேந்திரனுக்கு என்ன பெருமை?... வீர ராஜேந்திரன் என்ன செய்தான்?... போர்... போர்... .சுற்றிச் சூழப் போர்....

இது எப்போது ஓயும்?

மன்னன் எழுந்து மேன் மாடத்தில் உலாவினான்.

**அ**ந்தநிசி இரவில் கீழே ஏதோ வாக்குவாதம் சற்று உரத்த குரலில் கேட்கிறது.

''ரொம்பவும் அவசரம் ஐயா! நாங்கள் பல காதங்கள் நடந்து வந்துள்ளோம். உடன் மன்னரின் பதில் ஓலை தேவை. சமாதானத் தூதுவர்கள் மன்னனுக்கு மன நிம்மதியைத் தருவார்கள். எனவே அரசரின் உறக்கத்தை நீங்கள் அச்சமின்றிக் கலையச் செய்யலாம்.''

''யாரங்கே? வந்திருப்பவர்களை உள்ளே அழைத்து வாருங்கள்!''

ஒரு ஜரிகை சல்லாவைப் போர்த்திக் கொண்டு படியிறங்கி அவசர ஆலோசனைக் கூடத்தில் மன்னன் நுழைந்தபோது, அங்கு வெள்ளைக் கொடியுடன் சாளுக்கிய வீரர்களைக் கண்டான்.

''மேன்மை தங்கிய சோழப் பேரரசே! எங்களைச் சாளுக்கிய இளவரசரான விக்ரமாதித்தன் சமாதானத் தூதுக்கு அனுப்பி வைத்தார். ஒரு ஓலையும் அனுப்பியுள்ளார்.''

சமாதானம்!இச் சொல் சோழனின் நெஞ்சில் தேனைத் தடவிய ஆறுதலை அளித்தது.

ஓலையை விரித்த வீர ராஜேந்திரன் நெற்றியில் சுருக்கங்கள், பின்னர் குழப்பம்.

''வீரனே! ஓலையும் எழுத்தாணியும் கொண்டு வா...''

''சோமேஸ்வரனின் மரணத்துக்குப் பின் சாளுக்க நாட்டின் கலகம் தணிந்து. சோழர்களும், சாளுக்கர்களும் போரின்றி நிம்மதியாக ஒரு வழி சொல்வதாக எழுதியுள்ளீர்கள்.அப்படி ஒன்று இருந்ததால் நானும் மகிழ்வேன். நேரில் எப்போது வேண்டுமானாலும் சந்திக்க வரலாம்'' என்று எழுதினான்.

ஓலை கைமாறியது.

மன்னரின் செவியில் சாளுக்கரின் குதிரைக் குளம்பொலிகள் மங்கியவாறே இருந்த போது நெஞ்சில் ஒரு புது நிம்மதி பூக்க வாரம்பித்தது. சாளுக்கிய இளவரசன் விக்ரமாதித்தன் திட்டம் என்னவாக இருக்க முடியும்?

விடிந்தபோது வீர ராஜேந்திரனின் நெஞ்சில் ஓர் ஆவல் பறவை சிறகு விரித்தது.

மேன் மாடத்தினின்றும் கண்டபோது உதய சூரியனின் செஞ்சுடர்கள் இரத்தினக் கற்களின் ஒளி வீச்சாகத் தோற்றமளித்தன.

...இன்றைய உதயம் இந்நாட்டு மக்களின் வாழ்க்கை உதயமாகவும் இருக்கலாம்தான். விக்கிரமாதித்தன் திட்டத்தை நான் ஏற்றுக் கொள்ளும்படியாக இருந்தால்...

இரண்டே நாட்களில் இளவரசன் விக்ரமாதித்தனிடமிருந்து மீண்டும் ஓலை வந்தது.

''எனக்கும் கலிங்க மன்னனுக்கும் மண உறவு தரச் சம்மதமா?'' என்பதே ஓலையின் சுருக்கம். அதில் எல்லாமே அடக்கம்.

குபீரெனத் தான் புத்துணர்வு பெற்றாற் போல் உணர்ந்தான் வீர ராஜேந்திரன். இது ஏன் தனக்கு முன்பே தோன்றவில்லை? அரச குலத்தில் மண உறவு என்பது சமாதான யாத்திரை போன்றதல்லவா?

மலர்க்கொடிகளென சோழ இளவரசிகள் அபராஜிதாவும், அமராவதியும்...

மகா மேருவைப் போல் சாளுக்கிய விக்ரமாதித்தனும், கலிங்கத்து ராஜ ராஜனும்...

அமைச்சர் செல்வராயன் மன்னன் மொழிகளை ஆமோதித்தார்.

''அபராஜிதா சாளுக்கிய இளவரசன் விக்கிரமாதித்தனுக்கு! இந்த மண உறவால் பகைமை விலகி, உறவு பூக்கிறது. அமராவதி கலிங்க மன்னன் ராஜ ராஜனுக்கு. இந்த மண ஏற்பாட்டால் புதிய நட்பும், புதிய உறவும் மலர்கிறது. ஆம் அமைச்சரே! என் தீர்ந்த முடிவு அது. தீரா யுத்தம் தீரும் வழி இது. இந்தச் சோழ நாடு இனியாவது போரின்றி நிம்மதியைப் புகலடையட்டும். புதுக் கலைகள், காவியங்கள் நாடி, தேடி புகழடையட்டும். திருப்தியோடு உழைத்து உண்டு உறங்கிச் களிக்கட்டும்.''

திருவோலக்க மண்டபத்தில் மகிழ்ச்சியின் பீறிடல். அரசர், அமைச்சரிலிருந்து குடி படைகள் வரை குதூகலக் கொண்டாட்டம்.! வாரி வாரி வழங்கும் வாழ்த்தொலிகள்! பாமாலைகள் பாடும் புகழொலிகள்!

யுத்த முடிவில் ஒரு புதிய சாம்ராஜ்யத்தை ஸ்தாபிப்பதை விட, அதன் பின் நிகழவிருக்கும் அபாயமற்ற அமைதி எத்தனை நிம்மதியைக் கொடுக்கவல்லதாகிறது!

பராந்தகச் சோழன் காலத்தில் ரிக்வேதத்துக்குப் பாஷ்யம் எழுதப்பட்டாற்போன்றே தன் காலத்தில் ''வீர சோழியம்'' எனும் தமிழிலக்கண நூலை எழுதச் செய்து பெருமை சேர்த்துக் கொள்கிறான் வீர ராஜேந்திர சோழன்!

---

டும் இருந்தன-பிரகாஷ் முரளி. துருவ ஒற்றுமை: மொரார்ஜி தேசாயும்,இந்திரா காந்தியும் அரசியலில் இரு துருவமாக இருந்தாலும் ஒரு விஷயத்தில் மட்டும்

# புத்துணர்ச்சிதரும் தூய சுவாசம்...
# உறுதியிக்க, ஆரோக்கியமான பற்கள்

## அளித்திடுதே கோல்கேட் டென்டல் க்ரீம்

ஒவ்வொரு சாப்பாட்டிற்குப் பிறகும் கோல்கேட் கொண்டு உங்கள் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். உலகெங்கும் பல் டாக்டர்கள் சிபாரிசு செய்வதைப் போலவே அது உங்களைப் பாதுகாக்கிறது.

உங்கள் பற்களுக்கிடையே தங்கியுள்ள உணவுத் துணுக்குகளில் பாக்டீரியாக்கள் வளர்கின்றன. இவை வாய் துர்நாற்றத்தையும், பிறகு வலிமிக்க பற்சிதைவையும் உண்டாக்கும்.

எனவே சாப்பிட்டு முடிந்தவுடனேயே கோல்கேட் முறையில் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். அது புத்துணர்ச்சியுடன் இனிய சுவாசத்தைத் தருவதற்கும், பற்களுக்கு வெண்மையளிப்பதற்கும், பற்சிதைவை எதிர்ப்பதற்கும் மிகவும் சக்தி வாய்ந்தது என்று நிரூபணமாகியுள்ளது.

**கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும், பெப்பர்மின்ட் சுவை பல்துலக்குவதை ஒரு இன்ப அனுபவமாக்குகிறது.**

கம்பகமான, கோல்கேட்டின் செயல் புரியும் முறை



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற, செயல்புரியும் நுரை ஆழ ஊடுருவிச் சென்று உபாதை தரும் உணவுத் துணுக்குகளையும் பாக்டீரியாக்களையும் அகற்றி விடுகிறது.



பயன்: கவர்ச்சிமிக்க வெண்மையான பற்கள், தன்னம்பிக்கை தரும் இனிய சுவாசம், பற்சிதைவுக்கெதிராகப் பாதுகாப்பு.

**கோல்கேட் டென்டல் க்ரீம் உபயோகித்து வாய்துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்**







DC-G-74 TM

26

காலை மணி ஏழரையாகியும் சௌத் பீச் ரோடில் ஜனவரி மாதத்துப் பனி சில்லென்று உறைத்தாற்போலிருந்தது. சூரியன் உதித்து ஒரு மணி நேரத்துக்கு மேலாகியும் கீழ் வானில் மேகக் கூட்டம் திரை போட்டிருந்ததால் வெயில் உறைக்கவில்லை. பஸ் ஸ்டாப்புக்கு இன்னும் ஒரு பர்லாங் நடந்தாக வேண்டும். பஸ் பிடித்துப் பாரிஸ் கார்னர் சென்று அங்கிருந்து திருவொற்றியூர் செல்லும் மற்றுமொரு பஸ்ஸைப் பிடித்து எட்டரைக்குள் கல்யாணத்துக்குப் போக வேண்டும்.

முரளீதரன் வேகமாக நடந்தான். ராஜாமணியின் கல்யாணத்துக்கு மாப்பிள்ளைத் தோழனாக இருக்க வேண்டியவன். புதிய வேலையின் நிர்ப்பந்தம் ஊர் ஊராகச் செல்ல வேண்டியிருந்தது. கல்யாணத்துக்குப் போகாவிட்டால் ராஜாமணி பேச்சாலேயே விளாசி விடுவான். மேலும் பழைய நண்பர்கள் பலரையும் அங்கே சந்திக்கலாம்.

வயதான சிந்திக்காரர் ஒருவர். அவர் பக்கத்தில் பதினைந்து வயதுப் பெண்ணொருத்தி. மாக்ஸியிலும் அவள் மேனியின் செழிப்புத் தெரிந்தது. அழகான வெள்ளை நிற பொமரேனியன் நாயொன்று அவர்களுக்குச் சற்று முன்னால் ஓடிக்கொண்டிருந்தது.

வேகமாக நடந்ததால் உடம்பில் உஷ்ணம் ஏறியிருந்தது. அவனைக் கடந்து வெளிர் மஞ்சள் நிறத்தில் ''பியட் பத்மினி'' ஒன்று சென்றது. ஐம்பது கெஜம் போயிருக்கும் க்ர....ர்...ரீச்... பிரேக் போட்டு நின்றது. வண்டி மெதுவாகப் பின் பக்கம் வந்தது.

அவனுக்குச் சமமாக வந்தவுடன் அதை ஓட்டி வந்த நபர் டிரைவர் இருக்கையில் இருந்து பக்கத்து ஆசனத்துக்கு நழுவிக்கையை வெளியே நீட்ட.. அது ஓர் அழகான பெண்ணின் கை என்பது தெரிந்தது.

''ஹல்லோ! மிஸ்டர் முரளீதரன்!''

மிக இனிமையான, பழக்கப்பட்ட குரல் போல்...

திரும்பினான்.

அவளேதான்!

# கிருஷ்ணமணி

# கவர்ச்சிகள்

ராஜாமணிதான் எப்பேர்ப்பட்டவன்! நயா பைசா வரதட்சிணை வாங்காமல், கல்யாணச் செலவில் பாதிப் பங்கு தன்னுடையது என்று சொல்லி ஐயாயிரம் ரூபாயைப் பெண் வீட்டாரிடம் கொடுத்து விட்டானாம். என்னதான் காதல் திருமணம் என்றாலும் எத்தனை பேர் அவனைப் போல் செய்ய முன் வருவார்கள்? சொல்லும் செயலும் ஒன்றுபட்டவன். இலட்சியத்தினின்றும் சிறிதும் பிறழாதவன்.

தன்னைப் பற்றியும் நினைத்துக் கொண்டான். ஹிரண்மயி! அவள் இப்போது எப்படி இருக்கிறாளோ? தூய்மையான தங்கள் காதல் கனவுகளை எல்லாம் குருவிக் கூட்டைக் கலைத்து வேடிக்கை பார்க்கும் குரங்கு போன்று குப்புசாமியும், ராம நாராயணனும் வீணடித்து விட்டார்கள். பெண்மையைப் பறிகொடுத்த அவள் இப்போது அவர்களின் கைப்பொம்மையாக, ஊமை மனத்தோடு வாழ்ந்து கொண்டிருப்பாள். வாழ்க்கையில் என்றாவது ஒரு நாள் அவளைச் சந்திக்காமலா போய்விடுவோம்? ராம் நாராயணன் கம்பெனிக்குச் சென்று பார்க்கலாமென்றால் முடியாமலே போய்விடுகிறது.

கைக்கடியாரத்தைப் பார்த்தான். மணி ஏழேகால். நடையைத் துரிதப்படுத்தினான்.

ரேடியோ நிலையம் தெரிந்தது. எதிர்ச் சாரியில் கால் நடை பயிலும் கனவான்கள்.

''ஹிரண்மயி!....''

''யெஸ் டியர்...! கம் ஆன்இன்!'' காரின் கதவைத் திறந்தாள். முரளீதரனுக்கு ஒன்றும் புரியவில்லை. ஆகாசக் கலரில் அமெரிக்கன் ஷிப்பான் சேலை வாடாமல்லிகைக் கலரில் ரவிக். கோ கோ கண்ணாடி, வலது கையில் கடிகாரம். இடது கையில் ராஜஸ்தான் பட்டைத் தங்க வளையல். உதடுகளில் 'பின்க்' கலரில் சாயம். நெற்றியில் அதே நிறத்தில் பொட்டு. ஓர் அழகுத் தேவதையாகக் காட்சி தந்தாள் ஹிரண்மயி.

''முரளீ! டியர்! உள்ளே வாங்கோ!'' கொச்சையாகத் தமிழ் பேசினாள். அதிலும் இனிமை இருந்தது. அவன் பேசாமல் ஏறிக்கொள்ள முற்பட, அவள் டிரைவர் சீட்டுக்கு நகர, அவன் உள்ளே அமர்ந்து காரின் கதவைச் சாத்த, அடுத்த வினாடி உறுமி விட்டுக் கார் கிளம்பியது.

எட்வர்ட் எலியட் சாலை வந்ததும் வண்டியைத் திருப்பினாள்.

''ஹிரண்மயி! எங்கே போறோம்?''

''டிரைவ் இன் ரெஸ்டாரெண்டுக்கு. காலை சிற்றுண்டியை அங்கே போய்ச் சாப்பிடலாம்.'' கார் போய்க் கொண்டிருந்தது.

அவனுக்குத் தான் திருவொற்றியூர் போக வேண்டும் என்று சொல்லத் தோன்றியது. ஏனோ சொல்ல முடியாது தவித்தான்.

---

இருவரும் ஒற்றுமையாக இருக்கிறார்கள். இருவரின் ரத்தமும் (அபூர்வரத்தம்) O RH Negative பிரிவு. -பிரகாஷ் முரளி, மூன் எச்சரிக்கை மூல்லா; துக்கத்தை

அவன் அடிக்கொரு தரம் அவளைப் பார்த்தான். காரின் வேகம் அறுபது கிலோ மீட்டர் என்பதைத் தெரிந்து கொண்டான்.

''நான்....''

''ம்....''

''உன்னைப் பார்ப்பேன்னு நினைக்கவேயில்லே. சொன்னால் நம்பமாட்டாய். உன்னைப் பற்றி நினைத்துக் கொண்டுதான் நடந்து கொண்டிருந்தேன். தேவதைபோல் எதிரில் வந்து நிற்கிறாய்!''

''நான் தேவதையல்ல. டெவில். ஆனால் உங்களைப் பொறுத்த மட்டில் என்றும் ஹிரண்மயி என்கிற சாதாரணப் பெண்தான்! என்ன பார்க்கிறீர்கள்? இந்தக் குறுகிய காலத்தில் என் வாழ்க்கையில் பல மாறுதல்கள். நம்பவே முடியாத மாறுதல்கள். சந்தர்ப்பம் கிடைக்கும்போதெல்லாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். நழுவ விடக் கூடாது என்பார்கள். நான் இப்பொழுது அப்படித்தான் இருக்கிறேன்.''

''ஹிரண்மயி! நீ எப்போ கார் வாங்கினே? என்ன இதெல்லாம்?''

''நான் இப்போ வெளி உலகத்துக்குச் சாதாரண ஹிரண்மயி இல்லே. மாடர்ன் அட்வர்டைஸிங் கம்பெனி முதலாளி.''

''வாட்?''

''யெஸ்! மை டியர்! சொந்தமா கம்பெனி ஆரம்பிச்சிருக்கேன்!''

அவன் கண்கள் பனிச்சிட்டன. குறும்புத்தனம் மின்னியது. மெல்லமெல்ல அவள் சுருக்கமாக, தெளிவாக நடந்தவற்றை யெல்லாம் அவனுக்குச் சொன்னாள். வினாடிக்கு வினாடி அவன் ஆச்சரியத்தில் ஆழ்ந்து போனான். வாயே திறக்கவில்லை.

டிரைவ் இன் வந்து விட்டது.

காரை ஒடித்துத் திருப்பினாள். உள்ளே கார் பார்க்கில் அவள் வண்டி நின்றதும் பேரர்கள் ஓடிவந்தனர். ஒருவன் முந்திக் கொண்டான்.

''குட் மார்னிங் மேடம்!'' பதிலுக்கு ஒரு புன்னகையை வீசினாள்.

''மாதவன்! பிரேக் ஃபாஸ்ட் கொண்டு வா! ரெண்டு பேருக்கு!'' என்றாள். ''தினமும் இங்கு வருகிறேன்'' என்றாள்.

முரளிக்குச் சினிமாவில் வரும் காட்சி போல் தோன்றியது. அவள் மிக உரிமையோடு அவன் வலது தோளைத் தொட்டுப் பார்த்தாள்.

''வண்டியிலிருந்து இறங்காமலேயே சாப்பிடுவோம். உங்களைப் பார்த்ததில் மெத்த மகிழ்ச்சி!''

அவன் பேசாமல்இருந்தான்.

''முரளீ! என் மேலே கோபமா? நான் பணத்துக்காக என்னையே வித்துட்டேன்னு நினைக்கிறீங்களா? வேற என்ன செய்யமுடியும்? அந்த ராம்நாராயணனைப் பழி வாங்கிட்டேன். இப்போ அந்த ஆள் பிஸினஸ் ஃபீல்டை விட்டே போகப் போகிறார். குப்புசாமியைத் தூண்டிவிட்டு ராம் நாராயணனைப் பழிவாங்கச் செய்தேன். ஆனா அந்த ஆள் அளவுக்கு மிஞ்சிப் போயிட்டான்!''

''என்ன ஆச்சு?''

''நாராயண் டிக்ளேர்ட் அஸெட் இருபது இலட்சம்தான். கறுப்புப் பணம் முப்பது லட்சம் வச்சிருந்தார். விஜிலன்ஸ் ரெய்ட் நடந்தது. கணக்கிலே காட்டாத அந்தப் பணம் போயிட்டது. அவராலே அதுக்குக் கணக்குக் காட்ட முடியாது. காட்டினால் வரி போக மீதத்தைத் திருப்பிக் கொடுத்திடுவாங்க. பட் ஹி வில் நாட் பி ஏபிள் டு டு இட்! ஹி இஸ் எ லாஸ்ட் மேன்! புவர் ஃபெல்லோ!''

''தரை மட்டமா அடிச்சுட்டீங்களே!''

''நான் குப்புசாமியையும் ஆறு மாசத்துக்குப் பிறகு நீக்கிட்டேன். ராம நாராயணனுக்குச் செஞ்சதையே எனக்கும் செய்ய மாட்டான்னு என்ன நிச்சயம்! பிஸினஸ்லே சந்துலால் ஸேட் எனக்குக் கத்துக்கொடுத்த பாடம் இது. 'கனவான்னு நிரூபிக்கிற வரைக்கும் எவனையும் ஒரு போக்கிரியைப் போலவே பாவிக்கணும்' ஐ நோ! குப்புசாமி இஸ் எ ரியல் ரோக். முள்ளை முள்ளால எடுக்கிற மாதிரி ராம் நாராயணனை அவனோட ஆளாலேயே பழிதீர்த்தேன். ஹில்டா ஜான்ஸன், ஹிரண்மயி இந்த மாதிரி எத்

# இந்த வாரச் சிறுகதைகள்

உதய சூரியன் — கோமகன்

கதிர் அரிவாள் — ஜோதிர்லதாகிரிஜா

தாமரை — ஜெயரதன்

கை — அபர்ணா நாயுடு

# அடுத்த வாரச் சிறுகதைகள்

ரோஜா — புஷ்பா தங்கதுரை

இரட்டை இலை — ஜே. எம். சாலி

ஏர் உழுவன் — கோமதிசுவாமிநாதன்

அரிவாள், சுத்தியல் -நட்சத்திரம் — சுபா

---

தெரிவிக்கும் கறுப்பு அங்கியை அணிந்து தெரு வழியே சென்று கொண்டிருந்தார் நஸ்ருதீன். அதைக் கண்ட நண்பர் ஒருவர், ''நஸ்ருதீன், என்ன இது கறுப்பு உடை அணிந்திருக்கிறீர்கள்? யாராவது இறந்து விட்டார்களா?'' என்று

# அருள் வாக்கு...

'நாம் பிறந்ததற்கு என்ன பிரயோசனம்? எதற்காகப் பிறந்தோம்?' என்று அடிக்கடி நினைக்க வேண்டும். அந்தப் பிரயோசனத்தை அடைவோமா என்று நினைக்க வேண்டும். 'நமக்கு ஏன் பாவம் வருகிறது? கோபம் வருகிறது? காமம் வருகிறது? இவையெல்லாம் ஏன் வர வேண்டும்? எப்போதும் ஆனந்தமாக, சந்தோஷமாக இருக்கக் கூடாதா?'— என்று தோன்றுகிறது. இதற்குப் பதில்:

எல்லாம் நல்லதற்குத்தான். ஒரு மரத்திலே புஷ்பத்திலே விருந்துதான் காயும் பழமும் உண்டாகின்றன. புஷ்பமாக இருக்கும்போது மூக்குக்கும் பழமாக இருக்கும்போது நாக்குக்கும் ரஸமாக இருக்கின்றன. பழம் நல்ல மதுரமாக இருக்கிறது. இந்த மதுரம் வருவதற்கு முன்பு எப்படி இருந்தது? பூவில் கசப்பாகவும், பிஞ்சில் துவர்ப்பாகவும் காயில் புளிப்பாகவும் பிறகு மதுரமாகவும் ஆகிறது. மதுரம் என்பதுதான் சாந்தம். சாந்தம் வந்தால் எல்லாப் பற்றும் போய் விடுகிறது. பழத்தில் மதுரம் நிரம்பிய உடனே கீழே விழுந்து விடுகிறது. அதுபோல இருதயத்தில் எல்லா இடத்திலும் மதுரம் வந்து விட்டால் தானாக எல்லாப் பற்றும் போய்விடும். புளிப்பு இருக்கும்வரை பற்று இருக்கும். அப்போது காயைப் பறித்தால் காம்பில் ஜலம் வரும். காயிலும் ஜலம் வரும். அதாவது மரமும் காயை விடவில்லை; காயும் மரத்திலிருந்து விடுபட விரும்பவில்லை. ஆனால் நிறைந்த மதுரமாக ஆகிவிட்டால் தானாகவே பற்றும் போய்விடும். மரமும் பழத்தை விடுகிறது. பழமும் மரத்தை விடுகிறது. இரண்டும் ஜலம் விடாமல் — அதாவது அழாமல் — ஆனந்தமாகப் பிரியும். படிப்படியாக வளர்ந்து மனம் முழுவதும் மதுரமான ஒவ்வொருவனும் இப்படியே ஆனந்தமாக சம்சார விருட்சத்திலிருந்து விடுபட்டு இருப்பான்.



பழமாக ஆவதற்கு முன் ஆரம்ப தசையில் எப்படிப் புளிப்பும் துவர்ப்பும் வேண்டியிருக்கின்றனவோ அதுபோல் காமம், வேகம், துடிப்பு எல்லாமும் வேண்டியவைதாம் போலிருக்கிறது.

இவற்றுக்கு நாம் ஆரம்ப தசையில் ஆட்படும் போதே இவற்றிலிருந்து பூரணமாக விடுபட முடியாது. ஆனாலும் இவையெல்லாம் ஏன் வருகின்றன என்று அடிக்கடி நினைத்தாவது பார்க்க வேண்டும். 'இப்போது இன்ன உணர்ச்சி வந்ததே. ஆசை வந்ததே. கோபம் வந்ததே பொறாமை வந்ததே. பொய் வந்ததே இதனால் ஏதாவது பிரயோசனம் உண்டா? இந்த உணர்ச்சி அவசியமாக வருகிறதா அநாவசியமாக வருகிறதா என்று நினைத்துப் பார்க்க வேண்டும். அப்படி நினைக்கவில்லையென்றால் அவை நம்மை ஏமாற்றிவிடும்; ஏமாந்துவிடுவோம்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராசாரிய சுவாமிகள்

---

தனை பெண்களோட வாழ்க்கையில இவங்க புகுந்து விளையாடிச்சிருக்காங்களோ!''

பேரர் வந்தான். ஒரு தட்டில் குலாப் ஜாமூன் இருந்தது. மற்றும் சூடான வெண் பொங்கல், வடை இட்லி என்று வகை வகையாக இடைவெளி விட்டுக் கொண்டு வந்தன. கார்க் கதவின் வெளிப்புறம் மரஸ்டாண்ட் ஒன்றைப் பொருத்தினான். அதன் மீது தண்ணீர் வைத்தான். சாப்பிட்டுக் கொண்டே அவன் பேசினான்.

''ஸ்வீட் சாப்பிடுங்க. பெங்காலி வழக்கம்'' என்றான் சிரித்துக்கொண்டே.

இருவரும் சற்று நேரம் ஒன்றும் பேசாமல் சாப்பிட்டனர். அவனுடைய நீண்ட விரல்கள், அவற்றின் நுனியில் அழகாகச் சீவிவிடப்பட்டிருந்த நகங்கள். வெகு லாகவமாக அவன் தட்டிலிருந்து ஆகாரத்தை ஸ்பூனால் எடுத்துச் சாப்பிட்ட விதம் இவைகளைப் பார்க்கப் பார்க்க அவளுக்குள் அவளையும் அறியாமல் அவனிடம் ஈர்ப்பு உண்டாயிற்று. ஹிரண்மயி ஒரு ஸோபிஸ்டிகேடட் வுமன்! அவள் மனம் முணு முணுத்தது.

(அடுத்த இதழில் முடியும்)

---

கவலையுடன் விசாரித்தார் ''யாராவது. இறந்திருந்து அதை எனக்குத் தெரிவிக்காமல் இருந்தால் என்ன செய்வது? அதற்காக முன்னெச்சரிக்கையுடன் இந்த உடை அணிந்து கொண்டேன்!'' என்றார் நஸ்ருத்தீன் -எஸ். முகமது யூசுப்.

‘‘மிருதங்கம் கச்சேரியைப் போஷிப்பது எப்படி என்றால் டி. கே. மூர்த்தி மாதிரி வாசித்து போஷிக்கணும் என்று சொல்லலாம்!’’ — பி. வி. ராமன்.

‘‘தமது ஆற்றலைப் பூரணமாக மேடையில் காட்டாமல் விடமாட்டார் மூர்த்தி. அடங்கி வாசிப்பது என்பதெல்லாம் கிடையாது: இவரிடம் எதிர்பார்க்க முடியாது!’’ —முருகபூபதி.

‘‘மூர்த்தி பிரமாதமாக மிருதங்கம் வாசிப்பது மட்டுமல்ல, நன்றாகப் பாடுவார்! நாம் பாடுவது மட்டுமல்ல, மற்றவர்கள் எப்படிப் பாடுகிறார்கள் என்றுபாடியும் காண்பிப்பார். அசாத்திய சாமர்த்தியசாலி.’’—செம்மங்குடி

‘‘ஹரிகதைகளுக்கு வாசிப்பதென்றால் பல முன்னணி மிருதங்க வித்வான்கள் தயங்குகிறார்கள். மூர்த்தி அப்படி இல்லை. தேதி வசதிப்பட்டால் உடனே ஒப்புக்கொள்வார். போஷித்து வளர்க்கப்பட வேண்டிய கலை அது என்பதை உணர்ந்தவர்.’’

—ஆர். கிருஷ்ணசாமி

‘‘இவரது சிறப்பான மிருதங்க நாதம் எங்கிருந்து வந்தது என்று பார்த்தால் வைத்தியநாதனிடமிருந்து வந்த நாதம் என்று புரிந்துகொள்கிறோம். இவர் குரு தஞ்சை வைத்தியநாத அய்யர் அல்லவா?’’

—சீர்காழி கோவிந்தராஜன்



# பொன் விழா காணும் மூர்த்தி

‘‘ ‘மூர்த்தி சிறிதானாலும் கீர்த்தி பெரிது’ என்று அமரர் கல்கியால் புகழப்பட்டவர் இவர். திருவனந்தபுரத்தில் வளர்ந்து தஞ்சையில் குடியேறிப் பிறகு பிரகாசித்தார். நல்லவேலை மண்ணின் மைந்தர் கோஷங்கள் பிறந்திடு முன்பே வளர்ந்து விட்டார்!’’

—அமைச்சர் ஆர்.எம்.வீ.

‘‘இப்ப மாதிரி இல்லை. முன்பெல்லாம் குருகுல வாசம் செய்து பயின்றோம். எங்களால் குருவுக்குப் பைசா லாபம் இல்லை. எங்களால் செலவுதான் அவருக்கு.

‘‘தஞ்சாவூர் வைத்தியநாத அய்யரிடம் மிருதங்கம் பயில்பவர்களுக்காக நான் திரும்பத் திரும்ப வர்ணங்கள் பாடியபடி இருப்பேன். ஆழமான அஸ்திவாரமாக அமைந்தது எங்கள் கலைப் பயிற்சி.’’

- டி. எம். தியாகராஜன்

‘‘நான் திருவனந்தபுரத்தில் வளர்ந்தாலும் பூர்வீகம் மகாதானபுரம். பிறந்தது நெய்யாற்றங்கரை. தஞ்சையில் ஒரு ஹரிகதைக்குச் சிறுவனாகிய நான் வாசிப்பதைக் கேட்டார் தஞ்சாவூர் வைத்தியநாத அய்யர். பட்டு சால்வை போர்த்தி ஆசி கூறியதுடன், ‘‘என்னோட வரியா? கற்றுத் தரேன்’’ என்றார். ‘‘உங்களைக் குருவாக அடையத்தான் தவம் இருக்கான்’’என்றார் என் உறவினர். அதன் பின் தாய் தந்தையற்ற என்னை அந்தக் குறை தெரியாது வளர்த்தார் என் குரு.

‘‘நான் நன்றாக வாசிக்கிறேன் என்று நீங்கள் நினைத்தால் குருநாதர் ஆசி. இரண்டாவது காஞ்சிப் பெரியவாள் அநுக்ரஹம். அவர் ஒரு விருது வழங்கினார். நான் தயங்கி நின்றபோது ‘என்ன வேணும்?’ என்றார். ‘இல்லே... பட்டம் தந்துட்டேள்... நன்னு வாசிக்கணும்னு அநுக்ரஹம் பண்ணுங்கோ. நீங்க தந்த விருதுக்கு நான் தகுதி உள்ளவனாக விளங்கணுமே’ ன்னேன். பாலும் பழமும் பிரசாதமா தந்தார். ‘இது என்ன பிரசாதம் தெரியுமோ? நந்திகேசுவரர் பிரசாதம்! பாலைக் குடி. நன்னு வாசிப்பே, அமோகமா இருப்பே’ன்னார். அந்த ஆசியால்தான் வாசிக்கிறேன்.

‘‘பல மகா வித்வான்களுக்கு வாசிக்கக் கிடைத்த பாக்கியத்தாலே நான்அவர்களிடமிருந்து நிறையக் கற்றுக்கொள்ள முடிந்தது. அதனால் நன்றாக வாசிப்பதாக நீங்கள் கூறவும் முடிகிறது!’’

—பாராட்டுக்களுக்கு திரு டி.கே. மூர்த்தி பதிலுரை.

(இசை உலகில் ஐம்பதாண்டு பணியைப் பூர்த்தி செய்த மிருதங்க வித்வான் டி.கே. மூர்த்தி அவர்களைப் பாராட்டி நடந்த பொன் விழாவில் கேட்டவை.)

படம்: பொன்விழா மூர்த்திக்குப் பொன்னுடை - போர்த்துபவர் அமைச்சர் ஆர். எம். வீ.

# ஒழிவதற்குள் வா!

5

இரண்டு மூன்று பேர் அந்தநாயை தாஜா செய்ய முற்பட அது சிணுங்கிக்கொண்டு தள்ளித் தள்ளிச் சென்று கொண்டிருந்தது. அதன் வாயில் வைத்திருந்தது முழுப் புடவை இல்லை. புடவைத் துண்டம். பூப் பூவாகப் போட்டு ஏதோ நைலான் சமாசாரம் போல நீல நிறத்தில் சேறும் சகதியுமாக இருந்தது. உண்ணி ஒரு கல்லைப்பொறுக்கி அதை அடிக்க முற்பட அது விலகி ஓடிப் போய்விட்டது.

கனகசபைக்கு அந்தக் காட்சி வயிற்றை என்னவோ செய்தது. அந்த மாதிரி புடவை ஒன்று கிரிஜாவிடம் இருந்ததா என்ற கேள்வியை மனத்துக்குள் வலுக்கட்டாயமாக ஒத்திப்போட முயன்றாலும் அது மிதந்து மிதந்து திரும்ப வந்தது. சீ! என்ன எண்ணங்கள்! இது ஏதோ சம்பந்தமில்லாத ஒரு காட்சி.

''எங்கய்யா முதல்ல பார்த்தீங்க இந்த நாயை?''

''நிலத்தைக் காலால பிராண்டிப் பிராண்டிக்கிட்டு இழுத்துப் போட்டுதாங்க.''

''எங்க? எந்த இடத்தில?''

''சொியாச் சொல்ல மாட்டேங்குதுங்க.''

சிலர் அந்த இடத்தைக் காலால் தேய்த்து தேய்த்துச் சுரண்டிக் கொண்டிருந்தார்கள். மழை ஈரத்தில் கால்கள் சேறாக ஆனது தான் மிச்சம். அந்த இடம் சோலைக்குள் கொஞ்சம் தனியாக சமதளமாக இருந்தது. செம்மண்ணும் ஈரமும் கலந்து குழம்பாக இருந்தது. கனகசபையின் மனத்திலும் அந்த மாதிரிக் கலக்கமும் குழப்பமும் ஏற்பட்டுப் போயிற்று. கோவிலுக்குப் போனபோது பூசாரி பிராகாரத்தில் மஞ்சள் மலர்களைக் கொய்து கொண்டிருந்தார். குளித்து நெற்றி பூரா நீறணிந்து பிரகாசமாக இருந்தார்.

''வாங்க தம்பி, எங்க அம்மன் கும்பிட வந்திங்களா?''

''இல்லை'' என்றான் உண்ணி.

''ஏய் உன்னை யாரு கேட்டா?''

''பூசாரி, உங்க பேர் என்ன?''

''கந்தசாமிப் பண்டிதர்ங்க.''

''தனக்கு எதிலே பாண்டித்யம்''என்றான் உண்ணி.

''அட கம்மாரு குரங்கே! சொல்லுங்க. உங்க மனைவி வந்துட்டாங்களா?''

''இல்லை பூசாரி. அதைப் பத்தித்தான் விசாரிக்கலாம்னு வந்தேன். யாரைக் கேட்டாலும் புடி கொடுத்துச் சொியாப் பதில் சொல்ல மாட்டேங்குறாங்க. எங்க போயிருக்கும் தெரியவே இல்லை. நான்



சுஜாதா



வரது அதுக்கு நிச்சயம் தெரிஞ்சுதான் இருக்கும். ரம்ஸான் நேரத்தின்போது வருஷா வருஷம் வர்றவன்தான். போன தடவை லெட்டர்ல கூட எழுதியிருந்திச்சு. வீவுக்கு வர்றப்ப இதெல்லாம் வாங்கிட்டுவான்னு.''

''அப்ப வீவுல வரப்போவுறது அதுக்குத் தெரிஞ்சுதான் இருக்கணுமில்லிங்களா?''

''ஆமாங்க. அதான் எனக்குச் சம்சயமா இருக்கு''

''எங்கிட்ட எதுவும் சொல்லிட்டுப் போகலைங்களே. அண்ணா தங்கச்சி உறவுக்காரங்க வீட்டுக்குத்தான் போயிருக்கணும். நான் வேணா குறி பார்த்துச் சொல்லட்டுங்களா? அதில உங்களுக்கு நம்பிக்கை இருக்குதா?''

''எல்லாம் நுண பரயும்'' என்றான் உன்னி.

''ஏய் செவிட்டில வுட்டன்னா பாரு! என்ன நினைச்சுக்கிட்டிருக்கே? இந்தப் பையனைக் கிட்டச் சேர்க்காதிங்க. துபாய் துபாயின்னு கிடந்து அலையறான். குனிஞ்சா விரை அடிச்சுருவான்!''

''தனிக்கு அது இல்லல்லோ!''

''உன்னி! சும்மாரு. பூசாரி! இதைப் பாருங்க. இது யாரு படம்?''

பூசாரி அந்தப் படத்தைப் பார்த்து ''இதுவா? வந்துங்க இது ஒரு பெரிய மகான் படங்க. அவரு பேரு சாமிநாத சாமிகள். இல்லே சாமிதீர்த்த சாமிகளோ என்னவோ. திருவிழாவின்போது இங்க வந்து இருந்தாரு. சனங்களுக்கு நல்லது சொன்னாரு. கோயில் திருப்பணிக்காக ஆதீனத்திலேருந்து பணம் கொடுக்கிறதா சொல்லியிருக்கிறா. நான் கூடப் போயிப் பார்க்கணும். பத்தாயிரம் ரூபா கொடுக்கிறதா இருக்காரு.''

''அவர் எதுக்காக இங்கே வந்தாரு?''

''அது வந்துங்க இங்க கன்வர்சன் சாஸ்தியா இருக்கு பாருங்க, அதனால நம்ம இந்து தர்மத்தை நிலைநாட்டறதுக்காகப் பிரசாரத்துக்கு வந்தாரு.''

''எம்பாஸிடர் காரில வந்தது. வலிய பணக்காரனும்.''

''அவர் எங்க இருக்கார்?''

''அவர் ஊர் ஊராப் போய்க்கிட்டு இருப்பாருங்க.''

''சொந்த ஊர் எது?''

''அது வந்துங்க ரசவல்லிபுரம். திருநெல்வேலி ஜில்லாவிலே எட்டயபுரத்துக்குப் பக்கத்தில இருக்குதுங்க. அங்க மடம், கோயில் எல்லாம் இருக்குதுங்க. ஏன் போய்ப் பார்க்கணுமா? பார்க்கணும்னா நான் அழைச்சுக்கிட்டுப் போறேன்.''

''அவரு போட்டோ என் மனைவி கிட்ட இருந்தது. அதனால கேக்கறேன்.''

''அவரு போட்டோ இந்த ஊர்ல எல்லார் வீட்டிலயும்தாங்க இருக்கும். நல்ல தேஜஸ்வி. சனங்களுக்கு நல்லது சொன்னாரு. எப்பப் போறதா உத்தேசம்? நானும் வரேன்!''

''இன்னும் தீர்மானிக்கலிங்க. அவரைப் பார்த்து ஏதாவது நடக்கும்னா சரி.''

''ஒரு ஆளைப் பார்த்தா நல்லா ஞாபகம் வெச்சப்பாரு. இப்ப உங்க மனைவியைப் பத்திக் கேட்டா பேரைக் கேட்டாலே எங்க

இருக்காங்கன்னு சொல்லிடுவாரு ஞான திருஷ்டி!''

''இயாளுக்கு அவ்ட போகணுமாக்கம். அதொண்டா இல்லாத்த கதையொக்க உண்டாக்கிப் பரயுன்னு.''

''நான் போறதா இருந்தா சொல்றேன் பூசாரி.''

''சரிங்க. இந்தாங்க. குங்குமம் வாங்கிட்டுப் போங்க.''

''பூசாரி அந்த நாய் உன்னுதா?'' என்றான் உண்ணி.

''எது நாய்? சேச்சே!''

''நான் வரங்க.''

''எதுக்கும் கொஞ்சம் துப்புரவாவே விசாரிச்சு வையுங்க. ஊர்ல என்ன என்னவோ பொல்லாததெல்லாம் நடக்குதுங்க. அதுவும் கரையோரத்து ஜனங்க கிட்ட ரொம்பப் பணம் புழங்குதுங்க. எங்கிருந்து எப்படி வருதுன்னு தெரியலே. வெளிநாட்டுக்காரங்க வேலேங்கறுங்க.''

''பழமொழிகள் காலப் போக்கில் மாறுகின்றன'' என்னும் தகவலைக் கல்கியில் படித்தபோது எனக்கும் இரண்டு பழமொழிகள் நினைவுக்கு வந்தன.

'மண் குதிரையை நம்பி ஆற்றுக்குள் இறங்கலாமா?' என்பது ஒரு பழமொழி. வெள்ளம் வரும் காலத்தில் மணல் ஓரிடத்தில் குவியலாகச் சேரும். அதற்கு 'மண் குதிர்' என்று பெயர். மணல் மேடு ஆகையால் கால் வைத்ததும் உள்ளே கால்புதைந்து விடும். எனவே மண் குதிரை நம்பி ஆற்றில் இறங்குவது ஆபத்து என்பது அதன் பொருள். காலப் போக்கில் (குதிர் — ஐ) குதிரை என்பது குதிரையை என்றாகி விட்டது.

இதேபோல் ''ஆயிரம் வேரைக் கண்டவன் அரை வைத்தியன்'' என்பது நாளடைவில் ''ஆயிரம் பேரைக் கொன்றவன் அரை வைத்தியன்'' என்றாகி விட்டது.

—புலவர் கு. பாலசுப்ரமணியன்



''எதுக்கு?''

''எல்லாம் மதம் மாத்தறதுக்குத்தான்.''

''என்ன மதம்?''

''ஒரு பக்கம் முஸ்லிமுங்க, ஒரு பக்கம் கிறிஸ்தியன்க. பூரா பூரா இந்து கிராமம். சர்ச்சுக்குப் போற சனங்க யாரு? எல்லாரும் இந்தக் கிராமத்துக்காரங்க. அப்புறம் அன்னிக்கு நடராசனைக் கூப்பிட்டா நான் நடராசன் இல்லே அப்துல் ஜப்பார்ங்கறான்! உண்ணி! உன்னை யாரும் கேக்கலையா?''

''துபாய்க்கு ஒரு என்ஜேனி தந்தால் ஞான்ரண்டு மதத்திலும் சேரும்.''

''இத பாருங்க இது மாதிரி துபாய் பைத்தியம் ஒரு அம்பது பேருக்கு சேர்ந்திருக்கு கிராமத்தில. பெற்ற தாயை வித்துருவாங்க.''

கனகசபை குழப்பத்துடன் நடந்தான். சர்ச்சைக் கடக்கும்போது பாதிரியார் அவனைப் பார்த்துச் சிரித்தார். ''கனகசபை ஒரு நிமிஷம்'' என்றார்.

கிட்டப் போனான். ''ஒண்ணுமில்லே. ராத்திரி அடிச்ச மழையிலே பின்புறத்து ஆஸ்பெடாஸ் பிச்சுக்கிட்டுது. ரிபேர் செய்யக் கொஞ்சம் பொருளுதவி தேவையிருக்கும். நீங்க வெளி நாட்டில நல்லாச் சம்பாதிக்கிறீங்க. ஏதோ முடிஞ்ச அளவுக்கு உதவி செய்தா கர்த்தர் உங்களுக்குச் சகல சௌகரியங்களையும் உண்டு பண்ணுவார்.''

''அய்யா, என் மனைவியைக் காணுத குழப்பத்தில இருக்கங்க. அவ கிடைச்சுட்டா என்ன வேணு செய்யறேங்க.''

''கவலைப்படாதப்பா. உன் மனைவி எங்கயும் போயிருக்க மாட்டாங்க. ஒரு நாளில கலக்கமான எண்ணங்கள்ளாம் உண்டாக்கிக்காதே. இன்று மாலே ஜபத்தின் போது உன் மனைவியைப் பற்றி நல்ல சேதி வருவதற்கான ஸ்தோத்திரம் சொல்லிப் பிரார்த்திக்கிறேன்'' என்றார்.

அவரிடம் விடைபெறும்போது உண்ணி,

''இப்போ அயாள் அஸ்பெஸ்டாஸினெ நிங்ஙளோட்டு பணம் சோதிக்குந்து. அயாளுட கையில் ஒரு பாடு பைசை உண்டு. சாயப்பு வல்லிய காரில் வந்து ஒரு பா...டு பைசா கொடுத்துப் போகாருண்டு. கொச்சு கொச்சு குட்டிகளெ வேற பிடிச்சுக் கொண்டு போகும்.''

''உண்ணி! உளராதே! பூசாரி சொல்றதை யெல்லாம் நம்பாதே!''

''பூஜாரி பரஞ்சதல்லா! நாட்டுக்காரர்கள் கண்டதா! ஒமனென்னு பேராயிட்டுள்ள ஒரு குட்டிய காணுதாயிட்டுண்டு. பள்ளியில் அச்சண்ட கையில் ஒரு வலிய ஸஞ்சி உண்டு. வளர வேகத்தில் ஓட்டிக்கான் பற்றுள்ள ஒரு மோட்டார் சைக்கிளும் உண்டு.''

கனகசபை சிரித்தான். ''நாட்டுக்காரர்கள் நாலும் சொல்வார்கள். உங்க்காவுக்கு எப்பக் கல்யாணம்?''

''கையில் பைசை இல்லே.''

''எல்லாருக்கும் பைசா வேணம். உனக்கு துபாய் போக வேணம். ஆயிரம் ரூபா வெச்சிருக்கயாமே நிசமாவா?''




குணம் அதேதான்! ஆனால் இப்போது தோற்றம் புதிது!

# காட்பரிஸ் போர்ன்விடா இப்போது அழகிய புதிய பேக்கிலே!

உங்கள் குடும்பத்தினர் அனைவரும் விரும்பிடும் இனிய சுவை. கோகோ, மால்ட், பால், மற்றும் சர்க்கரையின் நற்பண்புகள் நிறைந்தது போர்ன்விடா— இப்போது கவர்ச்சியான புதிய பேக்கிலே. முந்துங்கள்— வாங்குங்கள் புதிய டின் அல்லது புதிய ரீஃபில் பேக் போர்ன்விடா— தயாரித்து அருந்தி மகிழ்வீர்.




OBM/7833-TAM.

**காட்பரிஸ் போர்ன்விடா**

உங்களோடு வளரும் நன்மை

''இல்லா. இருவத்தஞ்சு ரூபா!''
''போய்.''
உண்ணி அந்தப் பக்கம், இந்தப் பக்கம் பார்த்துவிட்டு, ''ஆரோடும் பரயல்லே'' என்று சொல்லி: ''எண்ட கையில் நூட்டம் பது ரூபாய் உண்டு. துபாய் போணமெங்கில் இனி எத்தரை பைசா வேணம்?''
''இன்னும் நிறைய வேணம்.''
''திருவனந்தபுரத்தில் ஏதும் ஆசுபத்திரியில ஒபரேசன் ஏதோ செய்தால் காசு கிட்டும்னு பரயுன்னுது.''
''பாவி, அதெல்லாம் பண்ணிக்காதே!''
''சோர கொடுத்தாலோ?''
''சோரன்னு?''
''ரெத்தம்! ரெத்தம்!''
''ஏண்டா இப்படி துபாய்ப் பைத்தியம் பிடிச்சு அலையறே! அங்க ஒண்ணுமில்லே! உன்னே மாதிரி ஆளுங்க நாயடி படறுங்க. வெய்யில்டா!''
''காசு தாராளம் கிட்டுமல்லோ!''
கனகசபைக்குத் திடீரென்று அது தோன்றியது.
''உண்ணி! பூசாரி அந்த சாமியாரு பேரு சாமிநாதன்னுதானே சொன்னரு! ஊரு ரசவல்லிபுரம்னுதானே சொன்னரு?''
''அதே!''
''ரசவல்லிபுரம் சாமிநாதசாமி! ர.சா. ''உண்ணி! நான் உடனே கிளம்பணும்.''
(தொடரும்)

---



# யுகமகா புருஷர்கள்!

நிலறயக் கண்டிஷன் போட்டு, ஜானகியை, சாரி — ஜானகி கொண்டு வரும் சம்பளத்தை மணந்து கொள்கிறான் கதாநாயகன் கல்யாணராமன்.

சம்பளத்திலிருந்து தம்பி படிப்பு முடிந்து வேலையில் அமருகிற வரை மாதம் நானூறு ரூபாய் கொடுக்க, கல்யாணராமன் கல்யாணத்துக்கு முன் ஒப்புக்கொண்டாலும், திருமணம் ஆன மறு மாதமே, 'நான் என்ன அக்ரிமெண்டா எழுதிக் கொடுத்தேன்' என்று அலட்சியமாக மறுக்கிறபோது—

ஒவ்வொரு செலவுக்கும் மாசத்துக்கு இவ்வளவு, வருஷத்துக்கு இவ்வளவு என்று பாக்கெட்கால்குலேட்டரை எடுத்துக் கணக்குக் கூட்டிப் போட்டுப்பார்த்துவிட்டுப் பிரமித்துப் போய் மனைவியிடம் சீறுகிறபோது,

மிஸ்டர் கல்யாண ராமன் காரெக்டரைக் கல்யாணத்துக்கு முன் ராமன், கல்யாணத்துக்குப் பின் ராமன் என்று இருவிதமான பாத்திரங்களையும் பார்க்கிறவர்களுக்கே ஆத்திரம் பொத்துக் கொண்டு வருமளவுக்குப் பிய்த்து வாங்கியிருக்கிறார் எழுதி, இயக்கி, கல்யாணராமனாக நடிக்கும் முரளி மனோகர். இவரது பாத்திர அமைப்பில் இருக்கும் குரூரமே நகைச்சுவைக்கும் அடிப்படையாக இருக்க, இப்படி ஒரு காரக்டரை வெற்றிகரமாகச் செய்ததற்கு இவரை நிச்சயம் பாராட்டலாம்! கல்யாணத் தரகர் ஸ்வேதாரண்யமாக வரும் டி. பி. கண்ணனின் நடிப்பும் சரி, நகைச்சுவையும் சரி, வெகு இயல்பு. ஜானகியின் தந்தையாக வரும் பண்பட்ட நடிகர் (இப்போது சினிமாவிலும் நடித்து வருகிறாராம்!) கரூர் ரங்கராஜ், உணர்ச்சி மயமாகத் தமது பங்கை நிறைவேற்றியிருக்கிறார். ஜானகியாக புஷ்பா ராணி ஜமாய்த்திருக்கிறார். கணவனின் கொடூரமான உள்ளத்தையும், கொடுமையையும் தாங்காது, மனசு நொந்துபோய், தந்தையிடமே திரும்புகிறாள் ஜானகி. யுக மகா புருஷர்களான கல்யாணராமனும், அவனுக்குத் தூபம் போடும் அவனது நண்பனும், அடுத்த பெண்ணைப் பார்த்தால் போயிற்று. கல்யாணம் என்ன பிரமாதம்!" என்று கொக்கரித்தபடி பேசும் வசனத்தோடு நாடகம் முடிகிறது.

இந்தக் கருத்தை, தேவையான — ஆனால் காரெக்டரோடு இணைந்த நகைச்சுவையுடன் வெகு அநாயாசமாக ஒரு சடையராக வழங்கியிருக்கும் முரளி மனோகருக்கு, திருமணமாகாத பல்லாயிரம் பெண்களும் அவர்களின் பெற்றோர்களும் நிச்சயம் பாராட்டுத் தெரிவிப்பார்கள்!

- சாருகேசி

⌘ எஸ். அன்புமணி, ஈரோடு-9.

? 'முன்பெல்லாம் எல்லாவற்றிலும் ஒழுங்கு இருந்தது இப்போது எல்லாவற்றிலும் சீர்குலைவுதான் இருக்கிறது' என்று ஒரு கூப்பாடு வலுத்து வருகிறதே?

! அதில் உண்மையும் இருக்கிறதே! சான்று: பம்பாயில் போலீஸ் புரட்சி. ஒழுக்கக் கட்டுப்பாட்டைக் காக்க வேண்டியவர்களே கட்டுப்பாடு இழக்கலாமா? இதைத் தூண்டி விடுபவர்களைத் தேசத்துரோகிகள் என்று வர்ணிப்பதில் என்ன தவறு?

நிலைமை இந்த அளவுக்கு வளரும் வரை காவலர்களின் கோரிக்கைகளைக் கவனியாமலும், அவர்களை நல்வழிப்படுத்த முயலாமலும் இருந்து விட்டதால் ஆட்சியிலும் சீர்குலைவு என்று கூறலாம்தானே?

⌘ எஸ். முத்துக்குமாரசாமி, தென்காசி

? நீங்கள் இந்தியாவின் பிரதமரானால் முதலில் என்ன செய்வீர்கள்?

! தனியாருக்கு ஒரு நீதி, பிரதமருக்கு ஒரு நீதி என்று கிடையாது என்பதைப் போலீஸாருக்கு உணர்த்துவேன். புதுதில்லியில் பிரதமரின் கார் பழுது பார்க்கப்பட, நிறுத்தக் கூடாத இடத்தில் நிறுத்தப்



○ கோ ஆப்டெக்ஸ் வண்ணத்துப் பூச்சி

பட்டிருந்தது. இதனால் வழக்குப் பதிவு செய்ய முயன்றார் ஒரு போலீஸ் அதிகாரி. இதற்காகப் பிரதம மந்திரி அலுவலகத்திலிருந்து அதிருப்தி தெரிவிக்கப்பட்டுள்ளது. நியாயமாகத் திருப்தி அல்லவோ தெரிவித்திருக்க வேண்டும்!

⌘ எஸ். ஆர். சுந்தரராஜன், சென்னை

? டெலிவிஷனில் தினம் இந்தியில் செய்தியும் நிகழ்ச்சிகளும் 45 நிமிஷங்கள் ஒளிபரப்புவது திணிப்பாகாதா?

! தமிழகத்தின் ஆட்சேபணைக்கு மத்திய அரசின் அதிகாரி வால் தந்துள்ள பதில் திருப்திகரமாயில்லை. மாலை ஏழிலிருந்து ஒன்பது வரைதான் டி. வி. ரசிகர்களுக்கு வசதியான நேரம் எனில் அந்த நேரத்தில் ஹிந்தி நிகழ்ச்சிகளையோ பிற மாநில மொழி நிகழ்ச்சிகளையோ ஒலிபரப்பி 'போர்' அடிப்பது கசப்பு உணர்ச்சியைத்தான் வளர்க்கும். தேசிய நிகழ்ச்சியை இரவு ஒன்பது மணிக்கு மேல் வைத்துக் கொள்வதுபுத்திசாலித்தனமாக இருக்கும்.

⌘ ஆர். நாகராஜன், பரசலூர்

? சமீபத்தில் தங்கள் மனத்தை நெருடிய அம்சம் என்ன?

! லாப்ஸ்டர் எனப்படும் (எரால்) கடல் ஜந்துவை மேல் நாட்டினர் விரும்பிச் சாப்பிடுகின்றனர். அது பெரிதாக வளர்ந்து கொழுத்தால் அதிகப் பணம் கிடைக்கும். இதைப் பெரிதாக வளர்க்க என்ன வழி என்று ஆராய்ந்த நம் விஞ்ஞானிகள் அதன் கண்களைக் குட்டியாக இருக்கும்போதே தோண்டி எடுத்து விட்டால் கொழுக்கும் எனக் கண்டறிந்துள்ளனர். இதைப் படிக்கும்போது மனம் நெருடவில்லையா? இந்த அகரச் செயலில் நம் மக்கள் ஈடுபடுவார்களோ என்று எண்ணும்போதே அருவருப்பாயிருக்கிறது.

⌘ ஜெ. குமரன், புதுச்சேரி

? மன்னிக்க முடியாத குற்றம் எது?

! இன்ஸாட்டிலிருந்து சங்கேதக் குறிகளைப் பெற்று, குறிப்பிட்ட எல்லைக்குள் ஒளி பரப்பும் வசதியுடன் கூடிய குறைந்த சக்தியுடைய டி. வி. நிலையங்களை நமது விஞ்ஞானிகள் முதன் முதலாகக் கண்டு



○ 13,000 மைல் ஒரே த்ரில்

பிடித்து, அவற்றை நிறுவுவதற்குரிய ஆற்றலையும் பெற்றிருக்கும்போது, அள்ளித் தெளித்த அவசரக் கோலமாக, ஆசிய விளையாட்டுக்களைச் சாக்கிட்டு, அமெரிக்க நிறுவனம் ஒன்றுக்கு ஆர்டர் தரப்பட்டுள்ளதை மன்னிக்க முடியாத குற்றம் என்று தாராளமாகச் சொல்லலாம். குறைந்த செலவில் நமது விஞ்ஞானிகள் சாதிக்கக் கூடிய காரியத்துக்கு அதை விடப் பல மடங்கு பணத்தை அந்நியச் செலவாணியாக அநாவசியமாக அள்ளிக் கொடுக்கப் போகிறோம். நஷ்டத்தையும் தாங்கப் போகிறோம்.

⌘ விமலா வித்யா; கிருஷ்ணராயபுரம்

? தவறான விடையை வரவழைக்கும் அறிவான கேள்விகளைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! என்னை நானே நொந்துகொள்வதைத் தவிர வேறு என்ன நினைப்பது? 'நா.பா. கதிரிலிருந்து விலகினாரா, விலக்கப்பட்டாரா?' என்று ஒரு கேள்வி. 'பட்டார்' என்பது என் பதில்! அவர் விலக்கப்பட

வில்லையாம், விலகவும் இல்லையாம். கதைக் கதிருக்கு அவர் ஆசிரியரானது இலாகா மாற்றமாம். 'பட்டார்' என்ற எனது பதில்தான், கி. ராஜேந்திரனைத் தீபம் பத்திரிகை ''பட்டார், பட்டார்'' என்று ஆத்திரம் தீரத் தாக்கக் காரணமாகி யிருக்கிறது என்பது இப்போது தெரிய வருகிறது.

⌘ எஸ். எஸ். மணி, திருவனந்தபுரம்

? அரசு சொன்ன அறிக்கை அரசின் செய்திப் படம் தான், முதல்வர் நடித்த படம் அல்ல என்பதைத்தான் தெளிவாக்கி யுள்ளார்களே?

! தெளிவாக்கவில்லை. மேலும் குழப்பி யுள்ளார்கள். சுந்தரம் அனுப்பிய சுற்றறிக்கை முதல்வர்எம். ஜி. ஆர் **நடித்த** திரைப்படங்கள் என்று தெளிவாகவே குறிப்பிடுகிறது.

⌘ மனோபாரதி, பாண்டிச்சேரி

? **சமீபத்தில் ஏற்பட்ட வியப்பான சம்பவம் என்ன?**

1982 உற்பத்தி அதிகரிப்பு ஆண்டு என அறிவிக்கப்பட்டிருக்கிறது எனில் இவ்வாண்டு முடிவதற்குள்ளாகவே சக்தி



○ திரு. வீரப்பன்

சர்க்கரை ஆலை முந்திக் கொண்டு அதிக அளவில் கரும்பு கசக்குவதில் இந்தியாவில் உள்ள 320 ஆலைகளுள் இரண்டாமிடம் வகிக்கிறது. சாறு பிழிவதில் அதிகத் திறமையும், சர்க்கரை இழப்பைக் கட்டுப் படுத்துவதில் அதிக ஆற்றலையும் காட்டி யுள்ளது.

⌘ கலைமகள் கிருஷ்ணன், உம்பளச்சேரி ★

? சென்ஸஸ் எடுப்பது, தேர்தல் கணக்கு எடுப்பது, சிறு சேமிப்புக்கு வசூல் செய்வது, குடும்பக் கட்டுப்பாடு அறுவைச் சிகிச்சைக்கு ஆள்பிடிப்பது, பள்ளி சீரமைப்புக்கு நன்கொடை வசூல், பொருளாதார புள்ளி விவரம் தயாரிப்பது, ரேஷன் கணக்கெடுப்பது, கார்டு வழங்குவது, சத்துணவுத் திட்டம் செயல் படுத்துவது-இத்தனையும் சுமக்கும் ஆசிரியர்கள் குழந்தைகளுக்குப் பாடம் எப்படி நடத்துவார்கள்?

! சத்தியமாகச் சொல்கிறேன், எனக்கு விளங்கவில்லை. ஆளை விடுங்கள்!

⌘ வி. சௌரிராஜன், ஸ்ரீரங்கம்

? ரசித்தல் ருசித்தல் எதில் உமக்கு ஈடுபாடு?

! ரசித்தலில்தான். ஆனால் அதிலும் ஆபத்திருக்கிறது. ''காஞ்சிஸு'' என்ற பெயரில் காஞ்சிபுரம் பட்டு நூலை ஊடையிலும் சீனப் பட்டு நூலைப் பாவிலும் கொண்டு புது ரகப் பட்டுச் சேலைகளை ''கோ—ஆப் டெக்ஸ்'' அறிமுகப்படுத்துகிறது. எழில் மிகு சேலைகளைக் கண்காட்சியில் ரசிக்க நான் தயார். ஆனால் என் மனைவிக்கோ அதை அணிந்து பார்ப்பதில் ருசி. எனவே ரசிக்கவே பயமாயிருக்கிறது!

⌘ ஆர். அரிகோபி, குடியாத்தம்

? மாணவர்கள் போதைப் பொருளுக்குச் சீக்கிரம் அடிமையாகிறார்களே?

! நல்ல விஷயங்களில் அவர்களுக்குப் போதை ஏற்றினால் எல். எஸ். டி., கஞ்சா, மது போன்றவற்றுக்கு அடிமையாக மாட்டார்கள். பூனாவிலிருந்து ஐந்து மாணவர்கள் ஆறு மோபெட்களில் 13,000 மைல் இந்தியா முழுதும் சுற்றிவிட்டு ஊர் திரும்பினார்கள். இவர்களைச் சென்னை



○ திரு என். மகாலிங்கம் சக்தி சர்க்கரை ஆலைத் தலைவர்

யில் ராஜ்கமல் நிறுவனம் வரவேற்றபோது திருபர்களிடம் ''படா த்ரில்'' என்றார்கள். 'த்ரில்' போதை மருந்துகளில் இருப்பதாக மாணவர்கள் எண்ணத் தொடங்கு முன்னர் அவர்களை இது போன்ற மெய்யான 'த்ரில்'களில் ஈடுபடுத்திவிட வேண்டும்.

⌘ கஜா, சென்னை-1

? சுநாடு, தண்ணீர் தண்ணீர் போன்ற படங்களை மறுபடியும் அமைச்சர் ஆர். எம். வீ. தாக்கியுள்ளாரே?

! அமைச்சராக இருப்பதால்தான் தாக்குகிறார். எதிர்க் கட்சியில் இருக்க நேர்ந்தால் பட்டுக் கொள்ள மாட்டார்.

★ ரூ. 10/- பரிசு பெறுபவர்:

கலைமகள் க. கிருஷ்ணன்,
2/30, நடுத்தெரு
உம்பளச்சேரி 614 711
தஞ்சை மா. வ.



# இந்தியாவும் சமயமும்

## 26 - 8 - 82 திருவிக அவர்களின் 100வது பிறந்தநாள்

உலகத்திலேஉள்ள தேசங்கள் பலவற்றுள்ளும் இந்தியா சமய உணர்ச்சியிலே பேர் பெற்றது. சமய ஞானத்தை உலகத்துக்கு வழங்கியது இந்தியாவே.

இந்தியர்கள் காலை முதல் மாலை வரை செய்யும் கிரியைகள் யாவும் கடவுள் நினைவை ஊட்டுவனவாகவே இருக்கின்றன. ஒவ்வோர் இந்தியனும் படுக்கையினின்றும் எழுந்தவுடனேயே கடவுளைத் தியானம் செய்யவேண்டும் என்னும் நியதி இருக்கிறது. நீராடும் போதும், உண்ணும்போதும் உறங்கும்-போதும் இறைவன் நினைவே உண்டாகுமாறு மகா மந்திரங்களை உச்சரிக்க வேண்டும் என நூல்கள் கூறுகின்றன.

அன்பு மயமாக உள்ள ஓர் அரும்பொருளை இடையீடின்றி ஒருவன் நினைத்து வருவானாயின், அவன் உள்ளமும் அன்பு மயமாகும் என்பதில் சந்தேகமில்லை. எவன் உள்ளத்தில் (மனத்தமுதாகிய) அன்பு உதயமாகிறதோ அவன் மற்றவரை அன்பாகக் காண்கிறான். அவனிடத்தில் அன்பாகப் பேசுகிறான். அவனிடம் பொறுமை, கோபம், கடுஞ்சொல் முதலிய தீக்குணங்கள் தலைகாட்டா. மனிதனிடத்துள்ள பொறுமை முதலிய துர்க்குணங்கள் கெட்ட விடமே மோட்ச லோகமாகும். அது சாயுச்சியம் எனவும், கைலாயம் எனவும் வைகுந்தம் எனவும் பரலோகம் எனவும் நிருவாண நிலை எனவும் வழங்கப்பெறும். இவை யாவும் ஒரு பொருளைக் குறிப்பனவே. இவை மனிதனுக்கு வேறாக உள்ளன என்று நினைப்பது அறியாமை. மனிதனது பூரண அன்பு நிலையே பேரின்பம் என்பது அனுபவ ஞானிகளின் கொள்கை.

இத்தகைய அன்பு நிலைக்கு வழியாகவுள்ள கிரியைகள் இந்தியாவில் அருகி விட்டன. கிரியைகளின் உண்மைப் பொருள் இறந்துபட்டமையான், இக்காலத்துச் சில அறிவாளிகளுக்கு அவை அறிவுடைச் செயல்களாகத் தோன்றுவதில்லை. சமய ஒழுக்கம் என்று இந்தியாவில் குன்றத் தொடங்கியதோ, அன்று தொட்டு இந்தியா வறுமைக்கும் பிணிக்கும் இரையாகிக் கொண்டிருக்கிறது. வெளி வேஷமே சமய ஒழுக்கம் என்று நினைப்பது அறியாமை. கொலை, கள், களவு, காமம், பொய் என்னும் ஐந்து பாவங்களைச் செய்யாதிருத்தல் சமய ஒழுக்கத்துக்கு அடிகோலுவதாகும்.

சமய ஒழுக்கத்துக்கு அடிப்படையாகவுள்ள ஐந்து பாவங்கள் இப்போது பொது தருமங்களாக அனுஷ்டிக்கப் படுகின்றன. அசோகர் ஆட்சியில் மிருக வேட்டை ஆடக் கூடாது என்று ஒரு சட்டம் இருந்ததாகத் தெரிய வருகிறது. ஒவ்வொரு ஜீவப்பிராணியும் தானாகவே சாகுமட்டும் ஒருவரும் அதற்

— திரு.வி.க. —




குத் தீங்கிழைக்க மாட்டார். இப்பொழுது மனிதர்கள் நிமித்தம் கொல்லப்படும் ஆடுகளுக்கும் மாடுகளுக்கும் அளவும் உண்டோ? புத்தர் பிறந்த பாரத நாடு கொலைக்கு நிலைக்களமாய் இருக்கின்றதே! என்ன கொடுமை!

பண்டைக் காலத்தில் சில தொழிலாளிகளே கள் அருந்திக் கொண்டிருந்தார்கள். இப்போது கற்றறிவாளர் என்போரும் கள்ளினும் கொடிய பானங்களை அருந்தி அறிவிழந்து வருவதை விரித்துரைக்க வேண்டுமோ? மிதமாகக் குடித்தல் உடலுக்குச் சுகம் என்னும் நீக்கோள் யாண்டும் பரவி வருகின்றது. குடியில்லா விருந்துக் கச்சேரிக்கு இப்பொழுது பெருமையில்லை.

வங்காளம் முதலிய தேசங்களில் வறுமையாலோ வேறு எந்தக் காரணத்தாலோ ஜனங்கள் அடிக்கடி பிறர் உடைமையைக் கவர்கின்றார்கள். அரசாங்கத் தண்டனைக்குப் பயந்து பலர் களவாடாமல் இருக்கின்றனர். பிறர் உடைமையைக் களவாடல் பாவம் என்னும் கொள்கை மாண்டுவிட்டது.

காமக் கொடுமையை விரித்துரைக்க, வேண்டுவது அநாவசியம். போலீஸ் கோர்ட் வழக்குகள் இதற்குச் சான்று கூறும்.

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று

என்று திருவள்ளுவர் பொய்யாமையின் பெருமையை ஓதியிருக்கின்றார். பொய் பேசாதிருத்தல் என்னும் ஒரு தருமத்தை ஒருவன் கடைப்பிடித்து ஒழுகுவானாயின். அவனை எப்பாவங்களும் அணுகா. பொய்யே பாவங்களுக்குத் தாய் தந்தை போன்றது. இப்பொழுது பொய் பேசப் பட்டம் பெற்று உலவுவோர் எத்தனையோ பேர் இருக்கின்றனர். திருவள்ளுவர் குறளைச் சட்டமாகவும் எல்லாம் வல்ல இறைவனை நீதிபதியாகவும் கொண்டு வழிபட்டு வந்த காலம் மீண்டும் வருமோ?

நூலறிவால் மனிதன் பாவங்களைச் செய்யாமல் இருக்க மாட்டான். இப்பொழுது புலால் உண்போர் கொல்லாமையைப் பற்றிப் பேசுகின்றார்; எழுதுகின்றார். எத்தனையோ குடியர்கள் கள்ளுண்ணாமையைப் பற்றிப் பிரசங்கம் செய்கின்றார்கள். கள்ளன், களவு பெரும் பாவம் என்று பிறருக்குப் போதிக்கின்றான். விபசாரி கற்பைப் பற்றி மேடையிலேறி உபந்நியாசம் செய்கின்றாள். பொய் பேசிப் பணம் பறிக்கும் பட்டதாரிகள் பொய்யாமையைப் பற்றி விரிவுரை கூறுகின்றார்கள். இதனால் நூலறிவு மனிதன் ஒழுக்கத்துக்குத் துணை செய்யாது என்பது நிச்சயம். செய்கையும் கூட்டுறவுமே ஒழுக்கத்துக்கு உயிர் போன்றவை.

இப்பொழுது உள்ள பாடசாலைகளால் மாணாக்கர்களுக்குச் சமய ஒழுக்க உணர்ச்சி உண்டாகாது என்பது திண்ணம். நாட்டுக் கல்லூரிகள் ஏற்படுத்தி, அவைகளில் மாணாக்கர்களுக்குச் சமய ஒழுக்கத்தைப் போதித்தல் வேண்டும். அப்பொழுது இந்தியாவில் பழைய சமய ஒழுக்கம் மீண்டும் உயிர் பெறும். இப்பொழுது சமய ஒழுக்கத்தை ஆபாசக் குப்பைகள் மூடிக் கொண்டிருக்கின்றன. இந்தியாவின் உயிர் சமயத்தில் அடங்கி யிருக்கிறது. சமய ஒழுக்க வளர்ச்சிக்காக முயல வேண்டுவது ஒவ்வோர் இந்தியர் கடமை.

'தேசபக்தன்' தலையங்கம் 5-3-1918
''குமரி மலர்'' – 1966 ஆகஸ்ட்

# பெண் என்னும் தேவதை!



கடந்த ஐந்து, பத்து ஆண்டுகளில் ஒருவித புது நாகரிகம் வளர்ந்து விட்டது. அதுதான் பெண்ணைச் 'சீரும் சிறப்புமாக வளர்ப்பது!'

'என்னது, பெண்ணைச் சீரும் சிறப்புமாக வளர்க்கக் கூடாதா? பெண்ணை அடிச்சு வளர், முருங்கையை ஒடிச்சு வளர்ங்கற பழைய பாட்டிக் கதையைச் சொல்லப் போறியா'

என்று அம்மாக்கள் என்மேல் சீறுவார்கள். அடித்து ஒடுக்கி, அடுப்புப் பெட்டகமாக வளர்க்க வேண்டாம். ஆனால்—

''என் பெண்ணுக்குக் காப்பி போடக் கூடத் தெரியாது. தெரிஞ்சு என்ன ஆகணும்? படிப்புல சூரப்புலி. போறுதோ? படிச்சு உத்தியோகத்துக்குப் போனா சமையலுக்கு ஆள் போட்டுக்கறா!''

என்பதும்,

''என்னத்துக்கும்மா சமையல் ரூமுக்குள் வர்றே! போய்ப் படி போ. இருக்கவே இருக்கு சமையல்கட்டு காலம் பூராதான். இப்பவே படிச்சு என்னத்துக்குப் புகையும், வாசனையும்...''

என்பதும் சாதாரணமாக இன்றைக்குக் குடும்பங்களில் கேட்டுக் கொண்டிருக்கும் வசனங்கள். இப்படி அம்மாக்கள் ஆதரவு இல்லையென்றால், பெண்களாகவே இந்த உரிமையை எடுத்துக் கொள்கிறார்கள். ஏதாவது வேலையைச் சொன்னால் 'எனக்கு டெஸ்ட்', 'ஸ்பெஷல் கிளாஸ்' என்று சாக்குப் போக்குடன் தட்டிக் கழித்து விடுவார்கள்.

பொதுவாகவே, போனால் இந்தத் துருவம் இல்லையென்றால் அந்தத் துருவம் என்ற கதையாகத்தான் இருக்கிறது. அந்தக் காலத்தில் பெண்களுக்குப் படிப்பு வாசனையையே காட்டாமல், சமையல் அறைக்குள் பூட்டி வைத்திருந்தார்கள்.

இன்றைக்குத்தங்களின்பெண்களை வாயைக் கட்டி, வயிற்றைக் கட்டி கான்வெண்டில் சேர்த்து விடுகிறார்கள். பிறகு வளருகிறது செலவு. அவர்களுடன் படிக்கும் பணக்காரக் குழந்தைகளைப் பார்த்து டிபன் பாக்சும், மதிய உணவின் ஐட்டங்களும் ஏறுவது போல, டான்ஸ், கிதார், வீணை இவையெல்லாமும் சேர்ந்து விடுகின்றன.

இரட்டைப் பின்னலும், முழங்கால் வரை யூனிபாரமும், நுனி நாக்கு ஆங்கிலமுமாக வரும் பெண்களுக்குத் திருஷ்டி சுத்திப் போடத்தான் தோன்றுமே தவிர, அடுப்பைப் பற்றவைக்கச் சொல்லத் தோன்றுமோ?

ஆனால்—

ஆயிரம் பெண்களின் உரிமை, சுதந்திரம் பேசினாலும் பெண் என்பவள் திருமணம் வரைக்கும்தான் அம்மா வீட்டில் இருக்க வேண்டியவள் என்ற பழக்கம் இருக்கும் வரை—

மனைவி எத்தனை படித்திருந்தாலும் அவள் கையால் சமைத்துப் பரிமாறச் சாப்பிட வேண்டும் என்ற பரம்பரையாக வரும் சில கனவுகளை ருசித்துக் கொண்டிருக்கும் 'இந்திய ஆண்கள்' இருக்கும்வரை—

திருமணமானவுடனே தன் அத்தனை முன் வாழ்க்கையையும் மறந்துவிட்டு அவள்மனைவி தாய் என்ற பந்தங்களில் மூழ்கத் தயாராகி







## முதல்வரின் சத்துணவுத்திட்ட நிதி உங்கள் காணிக்கையை அனுப்பி விட்டீர்களா?

''முதல்வரின் சத்துணவுத் திட்டக் கணக்கு'' என்று குறிப்பிட்டு உங்கள் நன்கொடையை ''நிர்வாகி, கல்கி - மங்கையர் மலர், சென்னை-32'' என்ற விலாசத்துக்கு அனுப்பவும்.

---

விடவேண்டும் என்ற 'நிமர் மறுபிறப்பு' எதிர்பார்க்கப்படும் வரை—

சில அடிப்படைப் பண்பாடுகளைத் தங்கள் பெண்களுக்கு இன்றைய தாய்மார்கள் கற்றுத் தந்துவிடுவது நல்லது. அவளை ' இந்த உலகத்துத் தேவதையாக மண்ணிலிருந்து ஓரடி மேலேயே மிதக்கும் கனவுப் பதுமையாக வளர்ப்பது நல்லதல்ல. ஒரு நிமிஷம் இன்றைய இளம் பெண்களைப் பாருங்கள். நான் சொல்வது எவ்வளவு உண்மை என்பது புரியும்.

இவள்—

மென்மையானவள்.

அதிரப் பேசத் தெரியாதவள்.

கீட்ஸையும், ஷெல்லியையும் மிருணாள் சென்னையும், ரேயையும் பற்றிப் பேசுபவள்.

வீணையில் மனோகரமாக, ஆத்மசுத்தியோடு கலந்து விடுபவள்.

நடைமுறை வாழ்க்கையும், அதன் மேடு பள்ளங்களும், மனிதர்களின் கேவலமான குறைநிசயங்களும் இவளுக்குத் தெரிவதில்லை. தன் பெண்ணை அத்தனை சிரோடு, சிறப்பாக, தன் வீட்டுக்குக் குலக்கொழுந்தாக அம்மா வளர்க்கிறாள்.

இவளை ஒருவனுக்குத் தாரைவார்க்கும்-போது—

இத்தனை நாட்கள் நடந்து கொண்டிருந்த குடும்பத்தில் ஒரு பெண் நிரந்தரமாகத் தங்க வரும்போது. இவள் இப்படி இருப்பாளோ, பிள்ளையை மயக்கி விடுவாளோ என்று சந்தேகத்தோடு பார்க்கும் பெண் உள்ளங்கள் ஒரு பக்கம். தனக்கென்று, தான் ஆளுவதற்கு ஓர் உயிர் கிடைத்து விட்டது (இந்த சுகோ இல்லாத ஒருத்தராவது இருக்கிறீர்களா? நெஞ்சைத் தொட்டுக் கொண்டு சொல்லுங்கள்) என்று கர்வத்தோடு மனைவியை ஒட்டி உரசி, அவளை அதிகாரம் செய்து, அவள் பணிவிடை செய்வாள் என எதிர்பார்த்துக் காத்திருக்கும் கணவன் மறுபக்கம்.

அம்மா '' வீட்டில் ராணியாக வளர்ந்தவள், முன்பின் தெரியாத வீட்டில் திடீரென்று எல்லாப் பொறுப்புக்களையும் ஏற்றுக்கொள்ள வேண்டிய குடும்பத் தலைவியாக மாற வேண்டிய நிர்ப்பந்தம்.

வீட்டுப் பெரியவர்களுக்கு, வந்த நாட்டுப் பெண்ணுக்குச் சம்பிரதாயங்களே தெரியவில்லையே என்ற வருத்தம். அதனால் ஏச்சுப் பேச்சு, குத்திக் காட்டல்கள். கணவனுக்கு இவள் எப்போப் பாரு புத்தகத்தை வைத்துக்கொண்டு பெரிய அறிவாளி மாதிரி படிக்கிறாளே என்ற கோபம். தான் கவிதை, கதை, சினிமாக்களில் பார்த்த கதாநாயகனைப் போலத் தன் கணவன் 'மெதுவாக நடந்து, மென்மையாக முத்தமிட்டு..' நடத்தவில்லையே என்று இவளின் நெஞ்சக் குமுறல்கள்.

அந்தப் பெண்ணுள்ளம், பேதையுள்ளம் படும் வேதனையை நினைக்கும்போதுதான் மிகவும் வருத்தமாகிறது. இதன் விளைவுகளே, 'புது மணப் பெண் மண்ணெண்ணெய் ஊற்றிக்கொண்டு தற்கொலை; 'பட்டதாரிப் பெண் வரதட்சிணைக் கொடுமையால் ஐந்து மாடிக் கட்டிடத்தில் இருந்து விழுந்து இறந்தாள்' இவை யெல்லாம். அன்றாடப் பத்திரிகைகளின் வாயில் அவலாகின்றன.

அம்மா, பெண்ணைப் பெற்ற புண்ணியவதிகளே!

நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுத்துவிட்டு, அவர்கள் படும் வேதனைகளைத் தாளாமல் சுவரில் முட்டி மோதிக் கொண்டு அழுகிறீர்கள் என்பது தெரியும். பயனென்ன?

ஒரு பெண் புகுந்த வீட்டுக்குப் போகும்போது அவள் என்னென்ன பிரச்னைகளைச் சந்திக்க வேண்டி வரும் என்பதைச் சொல்லுங்கள். உங்களுடைய அனுபவமே இருக்குமே! அவளுடைய கல்யாணத்துக்காக விழுந்து விழுந்து சாமான்களைச் சேர்க்கிறீர்களே! அதோடு அவளுடைய மனத்தையும் தயார் செய்யுங்கள். மனோ தத்துவ ரீதியாக அந்த வீட்டுப் பெண்களைப் புரிந்து கொண்டு கலந்து கொண்டு வாழச் சொல்லிக் கொடுங்கள். அவள் மனக் கோட்டை சிதல் சிதலாகப் போகாமல், மனக் கோட்டை உறுதியாக நிற்பது நீங்கள் உங்கள் பெண்ணை வளர்க்கும் முறையில்தான் இருக்கிறது.

—மஞ்சுளா ரமேஷ்

### கல்கி - பாரதி நூற்றாண்டுப் போட்டி-5

உமாபதி வரைந்துள்ள ஒவ்வொரு கார்ட்டூனுக்கும் பொருத்தமான ஒரு பாரதி கவிதை வரித் தொடர் எழுதி எதிர்ப் பக்கத்தை உறையிலிட்டு அனுப்பவும். உமாபதி எழுதித் தந்துள்ள வரித் தொடர்களுடன் நீங்கள் எழுதியுள்ள வரிகள் ஒத்துப் போனால் பரிசு ரூ. 150. ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசு பகிர்ந்தளிக்கப்படும். முடிவு தேதி செப்டம்பர் 15. உறையின் மேல் கல்கி – பாரதி நூற்றாண்டுப் போட்டி-5 எனக் குறிப்பிடவும்.

உதாரணத்துக்கு ஒரு கார்ட்டூனுக்கு ஏற்ற பாரதி வரிகள் தரப்பட்டுள்ளன.

→






காற்றிலேறி அவ்விண்ணையும் சாடுவோம்
காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே!

______________________________

______________________________

______________________________

______________________________




______________________________

______________________________

______________________________

______________________________




என் பெயர்: ------------------

விலாசம்: ------------------

------------------




______________________________

______________________________

______________________________



# அலுவலகத்தில் கடைசி நாள்!

நகைச்சுவையின் மறுபெயர் எழுத்தாளர் கோமதி சுவாமிநாதன். அஞ்சல் துறையில் பணியாற்றி ஓய்வு பெற்றவர். அலுவலகத்தில் அவருடைய கடைசி நாள் அனுபவத்தை அறிய எண்ணி, புரசைவாக்கம் வெள்ளாளர் தெருவில் அமைந்த அவர் இல்லத்துக்குச் சென்று ''மீட்டர் என்ன விலை'' என்று புடலங்காய் வியாபாரியிடம் ஜோக் அடித்துக் கொண்டிருந்த அவரைச் சந்தித்த போது—

''கடைசி நாள்... ஏறத்தாழ முப்பத்தேழு வருடங்கள் எனக்குப் படியளந்த பரமாத்மாவான அஞ்சல் அலுவலகத்தைவிட்டுப் பிரிகின்ற கடைசி நாள்... இருக்கையில் அமரும் முன்பு சுற்று முற்றும் பார்க்கிறேன். நான் ஓய்வு பெற்ற பின்பு இவர்களுள் எத்தனை பேர் என்னை நினைவில் வைத்திருப்பார்கள் என மனத்தில் ஓர் இலேசான சந்தேகம். இருக்கையில் அமர்கிறேன். 'சார் இன்னிக்கு ரிட்டயராகிறப் போலிருக்கு... காலையில்தான் கேள்விப்பட்டேன்...'' நண்பர் ஒருவர் விசாரிக்கிறார்.... 'கம்ப்பல்ஸரி ரிட்டயர்மெண்ட். போகத்தானே வேண்டும்' என்கிறேன் — எவ்வித சலனமுமில்லாமல். 'வாட்... நீங்க என்ன தப்பு செய்தீங்க... எதுக்காக உங்களுக்கு கம்பல்ஸரி ரிட்டயர்மெண்ட்?' — நண்பர் சோகமாகக் கேட்கிறார். ''ஐம்பத்தி எட்டு வயதை முடிக்கும் தப்பைச் செய்து விட்டேன்...'' என 'ஜோக்' அடிக்கிறேன். நண்பர் சிரித்துக் கொண்டே செல்கிறார்.



அடுத்து வந்தவர் என் இனிய நண்பர் ராஜகோபால ரவுத். வரும்போதே 'சாருக்கு இன்னிக்கு லாஸ்ட் டே' என்கிறார். எனக்குப் பதறுகிறது. ''யோவ்... ரவுத்... ஆபீசுக்குத்தான் இன்னிக்குக் கடைசி நாள். இன்னும் பல வருஷம் வாழணும்னு நினைச்சுண்டு இருக்கிற என்னிடம் இன்னிக்குத்தான் உமக்கு 'லாஸ்ட் டே'ன்னு நான் குறிக்கிறீரே... நியாயமா?'' என்கிறேன். அவரும் மற்றும் பலரும் சிரிக்க நான் அன்றைய அலுவலகப் பணிகளில் மூழ்குகிறேன். கடைசி நாள் கூட அத்தனை கணக்கு வகைகளையும் 'டோட்டல்' செய்துவிட்டு மூன்று மணிக்கு ஆபீசைக் 'கட்' அடிக்கிறேன். பல்கலைக் கழகத்துக்குச் செல்கிறேன். பாரதத்தின் பல பாகங்களிலிருந்தும் வந்துள்ள மாணவர்களிடையே ஆளுநர் ஆற்றும் உரையைக் கேட்கிறேன். ஒரு மினி இந்தியாவைக் கண்டுவிட்ட மகிழ்ச்சியில் நான்கு மணிக்கு மறுபடியும் அலுவலகத்துக்குத் திரும்புகிறேன்.

'அக்கவுண்ட்ஸ் பிராஞ்ச் அண்ணாச்சி'' என்று எங்களால் அன்புடன் அழைக்கப்படும் நண்பர் வருகிறார். 'நீங்க எதிலுமே அதிர்ஷ்டசாலி' என்கிறார்.

''கடைசி நேரத்தில் எக்ஸ்டென்ஷன் ஏதாவது கொடுத்திருக்கிறார்களா?'' என்கிறேன். (மனதிற்குள் உனக்கு எக்ஸ்டென்ஷன் ஒரு கேடா என்ற மனச்சாட்சியின் குரல்) அவர் சிரித்துக் கொண்டே 'உங்களுக்கு பென்ஷன் ஆர்டர் வந்துட்டுது ஸார்' என்கிறார். 'பென்ஷன் கிடைத்துவிட்டது' என அவர் மகிழ, மாதச் சம்பளம் பென்ஷனாக மெலிந்துவிட்டது பற்றி எனக்கு உள்ளூர வருத்தம். இருந்தாலும், 'இத்தனை வருஷ சர்வீஸில் சம்பளமில்லாத லீவோ, அரைச் சம்பள லீவோ எடுக்காத எனக்கு மெடிகல் லீவில் பாதிக்கு மேல் டிபார்ட்மெண்டுக்காகத் தாரை வார்த்துள்ள எனக்கு ஓய்வு பெறுகின்ற நாளே பென்ஷன் ஆர்டர் கொடுக்கக் கசக்குதோ?'' என்று சமாளிக்கிறேன்.

அதே வேளை — பென்ஷனுக்காக, நடையாய் நடக்க வேண்டியதில்லை என்றெண்ணும் போது, மனத்துக்குச் சற்று ஆறுதலாகவும் இருந்தது.

ஆறு மணி. டியூட்டி முடிகிறது. நாளைக்குப் பார்த்துக்கலாம் என எதையும் ஒத்திப் போட முடியாதே. ஆகவே, அத்தனை வேலைகளையும் முடிக்கிறேன். அஞ்சல் துறைத் தலைவரிடமிருந்து அழைப்பு வருகிறது. செல்கிறேன். வயிற்றில் காப்பியுடன் திரும்பி வருகிறேன்.

வெளியே வருகிறேன். எல்லோரும் என்னையே பார்க்க, ஏதோ ஓர் இனம் புரியாத கஷ்டம்.

தியாகராய நகர் வரை போகலாமா என்றெண்ணுகிறேன். எனினும் பழக்கப்பட்ட கால்கள் வழக்கமாக வீட்டுக்குச் செல்லும் பஸ் ஸ்டாப்பை நோக்கி நடக்கின்றன.

வீட்டுக்குள் நுழையும்போது....

'என்னங்க.... இன்னிக்கு நீங்க ரிட்டயர் ஆயிட்டீங்களாமே... ஜெயா சொன்னாள்... (ஜெயா என் மகள்) ஆமா... நீங்க இந்த விஷயத்தை என்னிடம் சொல்லவே இல்லியே' என்கிறாள் என் மனைவி. 'வேலையில், சேரும்போது உன்னிடம் சொல்லிக் கொண்டா சேர்ந்தேன்' என்கிறேன். 'நீங்க வேலையிலே சேரும்போது நமக்குக் கல்யாணமே ஆகலையே' என அவளுக்குச் சொல்லத் தெரியவில்லை....''

ஓய்வு பெற்றதைப் பற்றி எவ்விதக் கவலையுமில்லாமல் சிரிக்கிறார் கோமதி சுவாமிநாதன்.

—ஏ. வி. எம். கணேஷ்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani  Layout Artist: Nambi  Editor: K. Rajendran

# உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...




## செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த

# ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரை வளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

